ஸ்ரீ:

பதினெண்கீழ்க்கணக்கிலொன்றாகிய

# பழமொழி மூலமும்

## பழைய உரையும்.



[இரண்டாம்பகுதி. இரண்டாவது நூறுபாட்டு.]



இவை:

மதுரைத்தமிழ்ச்சங்கத்துச் "செந்தமிழ்"ப் பத்திராதிபர்

திரு. நாராயணையங்காரால்

பரிசோதிக்கப்பெற்று

அவரெழுதிய குறிப்புரையுடன்

பதிப்பிக்கப்பட்டன.




செந்தமிழ்ப் பிரசுரம்—௬௭.

மதுரைத்

தமிழ்ச்சங்க முத்திராசாலைப் பதிப்பு.

1922.

உ

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 122 | 4 | மாணாவினை | மாணா வினை |
| 124 | 4 | மறப்பினா | மறைப்பினா |
| 135 | 12 | விளங்கிளாய் | விளங்கிழாய் |
| 149 | 3 | இதனால் | இதனால், |
| 151 | 19 | படுமாறுபோல | படுமாறுபோல, |
| 178 | 32 | முழுங்கு | முழங்கு |

101. பரியப் படுபவர் பண்பில ரேனுந்
திரியப் பெறுபவோ சான்றோர்—விரிதிரை
பாரெறியு முந்நீர்த் துறைவ கடனன்றே
வூரறிய நட்டார்க் குணு.

எ - து, தம்மாற் காதலித்துப் பாதுகாக்கப்படுவார் குணமில்லாராயினும் சான்றோர் தமதுதன்மையின் வழுவப்பெறார், விரிதிரை பாரிலெறியும் முந்நீர்த் துறைவனே! ஊரிலுள்ளாரெல்லாருமறியத் தம்மோடுறவுசெய்தார்க் குணுக் கொடுக்கை கடனன்றே எ-று.

(குறிப்பு) இது, மனையாளைக் கணவன் பாதுகாக்கவேண்டுமென் கிறது. "பரியப்படுபவர்" என்றதற்கு "ஊரறியநட்டார்" என்னுங்குறிப் பால் மனைக்கிழத்தியர் என்பதுதோன்றத் 'தம்மாற்காதலித்துப் பாது காக்கப்படுவார்' எனப் பொருளுரைக்கப்பட்டது. 'குணமில்லாராயி னும்' என்றது கணவரை யொட்டியொழுகுதலாகிய குணமுடையாரா யில்லாதிருப்பினும் என்றவாறு. இங்குக் குணமின்மையாவது பட் டிமைமுதலிய குற்றமுடைமையொழிந்த வெறுமைத்தன்மை. இத னாற் குற்றமுடையாரைவிலக்கியவாறாயிற்று. 'சான்றோர்தமது தன் மையின்வழுவப்பெறார்' என்றது அறிவுடையோர் அவர்க்கு உண்டி யுடைமுதலியவுதவிப் பாதுகாக்கவேண்டுந் தமதுகடமையினின்றும் தவறலாகாதென்றவாறு. "கடனன்றே, வூரறியநட்டார்க்குணு" என் றது பழமொழிக்கூற்று. இது எடுத்துக்கொண்டபொருளை நாட்டுதற் குக்காட்டிய விஷயவாக்கியமாயிற்று. 'ஊரிலுள்ளாரெல்லாருமறியத் தம்மோடுறவுசெய்தார்க்'கென்றது "நாடுநகருமறியநல்லதோர்கண்ணு லஞ்செய்து"* கொண்ட மனைக்கிழத்தியர்க்கென்றவாறு. 'உணுக்கொ டுக்கை'-உயிர்வாழ்க்கைக்குவேண்டு முணவுமுதலியகொடுக்கை. 'கட னன்றே' என்றது பயன்வினைதலின்றாகவும் இழுக்குத்தீரச்செய்யுங் கடமையேயாம் என்றவாறு. இதன்பழமொழி தாலிகட்டினவன்சோறு போடமாட்டானோ எனச் சாதாரணவழக்காய்ச் செம்பொருளி லடிப் பட்டுவழங்குந் தொடர்மொழியெனவறிக.

---

* பெரியாழ்வார்திருமொழி 3-ம்பத்து 8-ம் திருமொழி 6-ம் பாசுரம்.

102. எனக்குத் தகவன்றா லென்பதே நோக்கித்
தனக்குக் கரியாவான் றானாய்த் தவற்றை
நினைத்துத்தன் கைகுறைத்தான் றென்னவனுங் காணா
ரெனச்செய்யார் மாணா வினை.

எ-து, எனக்கு இது தகுதியன்றென்பதனைப்பார்த்துத் தான்செய்தகுற்றந் தனக்குச் சான்று தானாய்த் தான் பிறனொருவன்மனையாளைத் தனியிடத்தே பிடித்த குற்றத்தைநினைத்து மற்றதற்குத் தண்டமாகத் தன்கையைத் தென்னவனுங்குறைத்தானாதலாற் பிறர்காணாரென்று தீவினைகளைச்செய்யார் நல்லோர் எ-று.

(குறிப்பு) இது, தம்மையொறுப்பாரில்லையென்றேனும் சான்றில்லையென்றேனும் ஒருவரும்ஒருகுற்றமுஞ்செய்யலாகாதென்கிறது. ‘எனக்கு இது தகுதியன்றென்பதனைப்பார்த்து’ என்றது பிறர்செய்த குற்றங்கண்டு அவரையொறுக்குமியல்புடைய அரசனாகியதான், தன்னையொறுப்பார் பிறரில்லையென்று குற்றஞ்செய்தல், தன்குற்றநீக்கிப் பிறர்குற்றங்காணக்கடவ தனக்குத் தகுதியன்றென்றுநோக்கி யென்றவாறு. இதனால் “எனக்குத்தகவன்று” என்பது தென்னவன் றன்னுள்ளேநினைந்தநினைவையுணர்த்தும் அநுகாரமாயிற்று. தன்னை நியமிப்பாரொருவருமின்றித் தானே எல்லாரையும்நியமிக்கும் அரசன் றானும் பிழைபுரிதல் தனக்குத் தகுதியன்றென்றதனால், அவனை நியாமகனாகவுடைய பிறர் பிழைபுரிதல் அவர்க்குத் தகுதியன்றென்பது சொல்லவேண்டாதாயிற்று. ‘தான்செய்தகுற்றந் தனக்குச் சான்று தானாய்’ என்றது குற்றஞ்செய்தோனாகிய தானே அக்குற்றத்திற்குச் சான்றுமாய்நின்று என்றவாறு. இது குற்றஞ்செய்தோனும் சான்றாவானும் ஒருவனாயிருக்கலாகாதென்னும் அரசியல்வழக்கொடுமலைவுண்டாயினும், தன்குற்றநோக்குழி யஃதில்லையென அமைவுகூறியபடி. இதனாற் பிறர்சான்றுள்ளவழிக் குற்றஞ்செய்யலாகாதென்பது சொல்லவேண்டாதாயிற்று. ‘தான் பிறனொருவன்மனையாளைத் தனியிடத்தேபிடித்தகுற்றத்தைநினைத்து’ என்ற உரைக்கு மூலமில்லாமையாலும், வேறுபிரமாணம் காணப்படாமையாலும் அது ‘பிறனொருவன்மனையினைக் கதவிடத்தேபிடித்தகுற்றத்தைநினைத்து’ என்றிருக்க வேண்டும். அதாவது:—கங்கையாடச்சென்ற கீரந்தையின்மனையாளது கற்புநிலையறியவேண்டி இரவிற் றனியேசென்று கதவுதட்டி

னின்ற தவறுநினைத்தென்றபடி. இது ஒருவன் றனக்குப் பிறர்செய்யுங் குற்றத்தைவிசாரிப்பார் பிறராயிருக்கவேண்டுமென்னும் நியதிபோலத் தான் பிறர்க்குச்செய்யுங்குற்றத்தைவிசாரிப்பாரும் பிறராயிருக்க வேண்டுமென்னு நியதியில்லையென்னுங் குறிப்புணரநின்றது. 'அதற்குத்தண்டமாக' என்றது தன்பொருட்டன்றியே நெஞ்சொடுபடாது தவறுதலாகச்செய்தகுற்றத்துக்குத் தண்டமாக என்றவாறு. இதனால், தன்பொருட்டாகவே நெஞ்சுறநினைந்துசெய்யுங்குற்றம் செய்யலாகாதென்பது சொல்லவேண்டாதாயிற்று. 'தன்கையைத்தென்னவனுங்குறைத்தான்' என்றது அரசனாகியதானே குற்றஞ்செய்தார் பிறரையெல்லாம் ஒறுக்கவல்ல தன்கையையுங் குறைத்தொறுத்தான் என்றவாறு. இதனைற் பிறரும் தம்குற்றம்நோக்கித் தம்மைத்தாமே யொறுக்கவேண்டுமென்பது சொல்லவேண்டாதாயிற்று. இங்ஙனம் கூறியவாற்றால் ஒருவர் தம்குற்றத்தைத் தாமேநோக்குமிடத்துச் சான்றும் ஒறுப்பாரும் தாமாயிருத்தலாற் சான்றில்லையென்றாயினும், தண்டிப்பாரில்லையென்றாயினும் குற்றஞ்செய்யலாகாதென்பது நிரூபிக்கப்பட்டது. இச்சரித்திரம், "கொற்கையான்மாறன்குலசேகரப் பெருமான், பொற்கையானகதைபோதாதோ—நற்கமல, மன்றலே வாரிமணிவாசலேயசைக்கத், தென்றலேயேன்வந்தாய்செப்பு"* என்னுந் தனிப்பாடலாலும், "உதவாவாழ்க்கைக்கீரந்தைமனைவி, புதவக் கதவம் புடைத்தனனோர்நா, ளரசவேலியல்லதியாவதும், புரைதீர் வேலியில்லெனமொழிந்து, மன்றத்திருத்திச்சென்றீரவ்வழி, யின்றவ் வேலிகாவாதோவெனச், செவிச்சூட்டாணியிற்புகையழல்பொத்தி, நெஞ்சஞ்சுடுதலினஞ்சிநடுக்குற்று, வச்சிரத்தடக்கையமரர்கோமா, னுச்சிப்பொன்முடியொளிவளையுடைத்தகை, குறைத்தசெங்கோற் குறையாக்கொற்றத், திறைக்கு"† என்னுஞ் சிலப்பதிகாரஅடிகளாலும், "தீமைசெய்தாய்போற்செங்கைகுறைத்தாய்"‡ என்னுந் திருவிளையாடற்செய்யுளடியாலும் குறிக்கப்பெற்றுள்ளது. 'ஆதலால்' என ஏதுவாசகம் வருவித்துரைக்கப்பட்டது. அதன்பொருள்:—ஒருவன்

---

* இது தனிப்பாடற்றிரட்டிற் கம்பர்பாடியதாகக் காட்டப்பட்டுள்ளது.

† சிலப்பதிகாரம் 23-வது கட்டுரைகாதை அடி 42முதல் 53வரை.

‡ பரஞ்சோதிமுனிவர்செய்த திருவிளையாடற்புராணம், பழியஞ்சினபடலம், செய்யுள்—17.

தான் பிறரறியாது மறைபச்செய்யுங்குற்றத்திற்குத் தன்னெஞ்சே யதனை யண்மைக்கண்ணின்றறியுங் கரியாயிருத்தலால் என்றவாறு. இதனை, "கண்டவரில்லென வுலகத்து ளுணராதார், தங்காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளு, ணெஞ்சறிந்த கொடியவை மறப்பினு மறிபவர், நெஞ்சத்துக் குறுகிய கரியில்லை"* என்பதனானும் அறிக. 'பிறர்காணுரென்று' என்றது பிறரொருவரும் அறியாரென்றெண்ணி யென்றவாறு. 'தீவினைகளைச்செய்யார் நல்லோர்' என்றது குற்றமானகாரியங்களை நல்லறிவுடையோர் செய்யமாட்டார் என்றவாறு. எனவே நல்லறிவில்லாததீயோரே தங்நெஞ்சறியுந்தீவினைகளைத் தனித்தவிடத்து ஒருவருமறியாரென்று மயங்கிச்செய்யாநிற்பர் என்பதாம். இதன் பழமொழிவடிவம் வந்தவழிக்கண்டுகொள்க.

103. நிரம்பி நிரயத்தைக் கண்டந் நிரயம்
வரம்பில் பெரியானும் புக்கா—னிரங்கார்
கொடியார மார்ப குடிகெட வந்தா
லடிகெட மன்றி விடல்.

எ-து, தான் பொய்புரைத்தாற்புகும் நிரயத்தையறிந்தும் அந்நிரயம்புகுதற்கேயமைந்ததொருபொய்யுரைத்துக் குணத்தால் வரம்பில்பெரியனுகிய தருமனுந் தான் காணக்கடவதல்லாதநரகம்புக்கானுதலான் முத்துத்தனிவடத்தையுடையமார்பனே! தாம்பிறந்தகுடிகெடுவதொரு காலம்வந்தால் அது கெடாதவகை தம்பகைவர்க்கிரங்காதே யவர்வேரறத் தண்டஞ்செய்துவிடுக எ-று.

(குறிப்பு) இது பகைவராற் குடிகேடுவருங்காலத்திற் பாவம் பழிபாராது அவரையொறுத்துக் குடியைப்பாதுகாக்கவேண்டுமென்கிறது. "நிரம்பி" என்றதற்கு ஒருகுறைபுமில்லாதவனுகி எனப் பொருளுரைத்துக்கொள்க. 'தான்பொய்புரைத்தாற்புகும்' என்ற இசையெச்சம் வருவித்துரைக்கப்பட்டது. 'நிரயத்தையறிந்தும்' என்றது நிரயத்துன்பத்தை நூல்களால் அறிந்திருந்தும் என்றவாறு. 'அந்நிரயம் புகுதற்கேயமைந்ததொருபொய்யுரைத்து' என்றது இசையெச்சத்தால், நிரயம்புக்ககாரணமும் அதன்கடுமையுந்தோன்றக்காட்டியவாறு. கடுமை இங்கு ஆசிரியன்மாட் டறிந்துபுரிந்ததன்மை. அதாவது:— "அத்தனைபடுவல்லாண்மையச்சுவத்தாமாவென்னு, மத்தவாரணத்துக்

* கலித்தொகை, செய்தற்கலி செய்யுள்—8.

கையோ மாருதிசிங்கமானுன்"*எனத் துரோணனைநோக்கிக்கூறினமை. 'குணத்தால் வரம்பில்பெரியானுகியதருமனும்' என்றது எல்லாநற்குணங்களாலுநிறைந்த சால்புடையனுகியதருமபுத்திரனும் என்றவாறு. வரம்பில்பெருமையும் சால்பென்னுங்குறிப்பும் ஒற்றுமையுடையனபோல வழங்கப்படுமென்பதைச் "சால்பினைச்சால்பறக்குமாறு"† என்றதனுன் அறிக. 'தான் காணக்கடவதல்லாத நரகம்புக்கான்' என்றது நிரயத்துன்பம் இத்தன்மைத்தென்று நூல்களால் அறிந்தமையாலும், சால்புடைமையாலும் தான் காணவுங்கடவதல்லாத நரகத்தைப் புக்கனுபவிக்கவும் இசைந்தான் என்றவாறு. இதுகாறும் எடுத்துக் கொண்டபொருளுக்கேற்றதோர் இதிகாசங்கூறப்பட்டது. 'ஆதலான்' என ஏதுவாசகம் வருவித்துரைக்கப்பட்டது. 'தாம் பிறந்தகுடிகெடுவதொருகாலம்வந்தால்' என்றது தாம் பிறந்தகுடிக்குரிய உரிமைகளைக் கெடுக்கப் பகைவர் சூழ்ச்சிபுரிந்துவந்த காதாசித்கமான காலவிசேஷத்தில் என்றவாறு. அவரும் அது செய்தல் சாதாரணமன்று ஆதலால் அதற்கொறுத்தலும் சாதாரணமன்று என்பது குறிப்பு. குடிக்குரிமையாவதுபுத்ரமித்ரகளத்ரக்ஷேத்ராதிகளும்பிறசுதந்தரமும்.'அதுகெடாத வகை' என்றது அவ்வுரிமை அவராற் கெடாதிருக்கும்பொருட்டு என்றவாறு. 'தம்பகைவர்க்கிரங்காதே' என்றது அவர்க்குவிதிக்கத்தகுந் தண்டத்தின்கடுமைதோன்ற அதனை விசேடித்தவாறு. 'வேரறத் தண்டஞ் செய்துவிடுக' என்றது வேண்டும்பகைவரைத் தமது ஆதாரத்தோடழியுமாறு ஒறுத்துவிடுக என்றவாறு. இதற்கு அறிவுடையோர் என்னும் எழுவாய் எஞ்சிநின்றது. இதனுல், ஒருவர்க்கும் ஒருதீங்கும் இழையாது நெறிப்படவொழுகும் ஒழுக்கநடையினும், குடிகெடுக்க முயலும்பகைவர்க்கு நெறிபிறழப் பெருந்தீங்கிழைத்தாயினும் அது கெடாதுகாக்கும் உலகநடை மிகச்சிறந்ததென ஆபத்தருமங் கூறப்பட்டது. ஈற்றடி பழமொழிக்கூற்று. இதன்பழமொழி (தீங்கிழைக்கும் கொடியாரை) வேறக்களையவேண்டும் என வீரச்சுவைதோன்ற அடிப்படவழங்கும் தொடர்மொழியென அறிக. இதனுட்கூறியவேரறலை, மூலதோஹாரி எனவும், நிர்மூலம் எனவும் வடமொழித்தொடராலும் வழங்குவதுண்டு. ஆபத்துக்குப்பாவமில்லை என்பதொரு பழமொழியிருப்பினும் அது பிறவேறுபொருளையு மகப்படுத்திப் பொதுமையினிற்றலால் ஈண்டைக்கேலாதெனவுணர்க.

---

* வில்லிபுத்தூரார்பாரதம் பதினேந்தாம்போர்ச்சருக்கம் செய்யுள்—27.

† இந்நூலின் பன்னிரண்டாஞ்செய்யுள்.

104. நல்லவுந் தீயவு நாடிப் பிறருரைக்கு
நல்ல பிறவு முணர்வாரைக் கட்டுரையின்
வல்லிதி னாடி வலிப்பதே புல்லத்தைப்
புல்லம் புறம்புல்லு மாறு.

எ-து, இவை நல்லவென்றும் இவை தீயவென்றுமாராய்ந்து பிறருரைக்
கின்ற நல்லவற்றையும் நல்லவல்லாதவற்றையும் அறியவல்லாரைக் கட்டுரை
வலத்தால் விரைந்தாராய்ந்து தம்வயத்தராகச்செய்வது ஆனேற்றை ஆனேற்றி
னாலே தன்மாட் டணைக்குமாறுபோலும் எ-று.

(குறிப்பு) இது, வழக்கறியவல்லாரை யொருவன் வலியாரைக்கொண்டு
அழிவழக்குப்பேசிமருட்டித் தன்வயமாக்கலியலாதென்கிறது. 'இவை
நல்லவென்றும் இவை தியவென்றும் ஆராய்ந்து' என்றது நூலானும்
நுணுகியவுணர்வானும் இவ்வழக்கு நீதியொடுபட்டதென்றும், இவ்
வழக்கு நீதியொடுபடாததென்றும் தாமே ஆராய்ந்துதெளிந்துகொண்
டவராய் என்றவாறு. இது 'அறியவல்லாரை' என்னும்வினையாலணை
யும்பெயருள், அறியவல்லார் என்னும் வினைகொண்டுமுடிந்தது. நல்ல,
தீய என்பன சாதிப்பன்மை. பின்வரும்பன்மையு மது. 'பிறருரைக்
கின்ற நல்லவற்றையும் நல்லவல்லாதவற்றையும் அறியவல்லாரை' என்
றது வழக்காடுவோர் தம்வழக்கே நீதியொடுபட்டதென்றும், தம் மறுதலை
வழக்கு நீதியொடுபடாததென்றும் வாய்வன்மையாலுரைக்குமவற்றி
னுண்மையுணரவல்ல நீதிபதியாவாரை என்றவாறு. 'கட்டுரைவலத்
தால் விரைந்தாராய்ந்து தம்வயத்தராகச்செய்வது' என்றது ஒருவர்
தம் வழக்காடியின்வாய்வன்மையால் வாதப்பிரதிவாதவிவகாரவிஷயங்க
ளின் குறைகுணங்களைத் தமக்கநுகூலமாகவிரைந்து ஆராய்ச்சிசெய்து
பிறழக்காட்டித் தம்வயமாக்கிக்கொள்ளத்துணிவது என்றவாறு.
'ஆனேற்றை ஆனேற்றினாலே தன்மாட்டணைக்குமாறுபோலும்' என்
றது ஒருவன் தன்வயமாகாது புறஞ்செல்வதோரானேற்றைத் தன்
வயப்பட்டதோரானேற்றாற் போராடவிட்டு அதனைத் தன்வயமாக்கிக்
கொள்ளத் துணிவதுபோலும் பயனின்முயற்சியாம் என்றவாறு. அதா
வது:—எருதோடெருதுபொருதவிடத்து அவ்விரண்டும் பிரிதுபடுவ
தல்லது ஒன்றுபடாதவாறுபோல நியாயமறிந்துள்ளநீதிபதிகள், வல்
வழக்காடியின்வாய்வன்மையான்மயங்கி அவர்வயமாய் ஒன்றுபடமாட்
டார் என்பதாம். இங்கு ஆனேற்றை ஆனேற்றாற் றன்மாட்டணைத்தல்

இயலாமைக் குறிப்புணர்த்தி நின்றதென்பதைப் பின் "உண்ணா, விண்டேனொருதுறையுணீர்"* என்பதனானும் அறிக. ஏருதுக்கேருது குடல்சரியப்பாயாது என்பது இதன் பழமொழி. இது பிறிதுமொழிதலாய் வல்லானை வல்லானும் வெல்லலரிது என்னும்பொருளில் வழங்கப்படும்.

105. சுடப்பட் டுயிருய்ந்த சோழன் மகனும்
பிடர்த்தலைப் பேரானைப் பெற்றுக்—கடைக்காற்
செயிரறு செங்கோல் செலீஇயினா னில்லை
யுயிருடையா ரெய்தா வினை.

எ-து, இளமைப்பருவத்துப் பிறராற் சுடப்பட்டும் உயிருய்ந்துபோகிய கரிகாலனும், இரும்பிடர்த்தலையாரென்னும் பெயரையுடைய தன்மாமனைத் தனக்குத்துணையாகப்பெறுதலாற் பின்னொருகாலத்தின்கட் டன்னுரிமையரசுபெற்றுக் குற்றமற்றசெங்கோலைநடத்தினானாதலால் உயிருடையாரெய்தாததொரு நல்வினைப்பயனில்லை எ-று.

(குறிப்பு) இது, வடநூன்முறைமைபற்றி, தந்நிலையிற்றாழ்வு வந்தவழி இளிவந்தனசெய்தாயினு முய்க வென்கிறது. 'இளமைப்பருவத்து' என்றது கடிநிலையனாய் அரசுரிமையெய்தியிருந்தகாலத்தில் என்றவாறு. 'பிறரால்' என்றது (தன் மாறுபாட்டின்மிகுதிதோன்ற) நொதுமலாளருமகப்படப் பேர்நேர்ந்தெதிர்ந்தபகைவரால் என்றவாறு. 'சுடப்பட்டும்' என்றது தன்னரண்முற்றப்பெற்றுப் போக்கொடுபுகலொழியுமாறு அகமும்புறமும் எரியூட்டிச்சுடப்பட்டிருந்தும் என்றவாறு. உம்மை மானமுடையார்க்குப் தல்கூடாத இறப்பவருவழியின் சிறப்புணர்த்திநின்றது. உயிருய்ந்துபோகியகரிகாலனும் என்றது பகைவர்க்குப்பின்னிடுதலாகாதென்னும் மானத்தையுமிழந்து அப்பகைவர்க்ககப்படா தவ்வெரியிடையே நடந்தோடிக்கடந்தமையாற் கரிந்தகாலையுடையனாகிய வளவனுமென்றவாறு. இது இளிவந்தசெய்தமைகூறியபடி. வளவனும் என்னும் உயர்வுசிறப்பும்மை, பொதுமக்களிந்நெறிபற்றியொழுகு மொழுக்க மிழுக்கமாகாதென்னுங்குறிப்புணர நின்றது. 'இரும்பிடர்த்தலையார் என்னும்பெயருடைய' என்றது, (மூலத்துள், பிடர்த்தலையானை என் றெளிதிற்கூறாது பிடர்த்தலைப் பேரானையென வேண்டாதுகூறியகுறிப்பாற்,) கருங்கையொள்வாட் பெரும்பெயர்வழுதியைப்பாடிய பாட்[illegible]ப்பாட்டாற் சிறப்புற வந்த இரும்பிடர்த்தலையார் என்னும் பிரதிநாமமுடையாராகிய என்றவாறு. இது பெறுதற்கரிய துணையின்சிறப்புத்தோன்றக்கூறிய குறிப்பு.

---

* இந்நூலின் 239-ம் செய்யுள்.

தன்மாமனை'என்றது துணையாதற்குறப்பாம் உரிமையுடைமைகூறிய 'படி. 'தனக்குத்துணையாகப்பெறுதலால்'என்றதுபிறர்க்குத்துணையாம் படி தன்மாறுபாட்டால் முன் பவரையிழந்திருந்த இழவுதீர முயன்று தனக்குத்துணையாகப்பெற்று அப்பேறுகாரணமாக என்றவாறு. இது இவரைத் துணைபெற்றமையும் உயிருய்ந்தமைக்கு ஒருபேறாயிற்றுஎன் னுங் குறிப்புணர்த்தியபடி. 'பின்னொருகாலத்' தென்றது, தனக் காங் காலமும் தன்பகைவர்க்குப் போங்காலமுமாய்வந்த காலவிசேடத்தி லென்றவாறு. 'தன்னுரிமையரசுபெற்று' என்றது தானிழந்தொழிந்த பெருஞ்செல்வமெய்தியென்னுங் குறிப்புணர்த்தியவாறு. 'குற்றமற்ற செங்கோலைநடத்தினன்' என்றது முன்புபோலன்றி, மாறுபாட்டின் மிகையொழித்துத் துன்பமின்றி யுலகாண்டு சுகமாகவாழ்ந்தான் என்ற வாறு. 'ஆதலால்' என்றது எடுத்துக்கொண்டபொருள்துணிதற் கிவ் விதிகாசம் ஏதுவாம் என்னுங்குறிப்புணர்த்தியவாறு. 'உயிருடையா ரெய்தாதவொரு நல்வினைப்பயனில்லை' யென்றது மானத்தா லுயி ரிழக்கவேண்டு மாபத்திலும் அதனையிழவாது பாதுகாத்திருப்பார்க்கு ஒருகாலவிசேடத்தா லேதாயினுமொரு நல்வினைப்பயனெய்தல்கூடும் என்றவாறு. இவ்வொழுக்கம் "மானம்படவரின்வாழாமைமுன்னினி தே"* என்பதனுள், முன் என்ற விதப்பால், வாழ்தலினும் வாழாமை மிகவுமினிது என்னும்பொருள்பட வாழ்தல் தழுவப்பட்டமையால், "இன்றியமையாச்சிறப்பினவாயினுங், குன்றவருபவிடல்"† என்பத னோடு மாறுபடாதாயிற்று. இவை வேள்விக்கொலையுங் கொல்லாமை யும்போல மாறுபாடில்லாத வேறுபாடுடையவென வறிக. இச்சரித் திரத்தின் முற்பாகம், "முச்சக்கரமுமளப்பதற்குநீட்டியகால், இச்சக் கரமேயிழந்ததாற்—செய்ச்செ, யரிகான்மேற்றேன்றொடுக்குமாய்புன னீர்நாடன், கரிகாலன்கானெருப்புற்று"‡ என்னும்வெண்பாவாற்குறிக் கப்பட்டது. இதன் பழமொழி உயிரோடிருந்தால்உப்புமாறியுண்ண லாம்¶ என்பதாம். இதன்பொருள்:-ஓராபத்துவந்தகாலத்தில் மற் றெல்லாவற்றையும் இழந்தாவது உயிரொன்றனைப் பாதுகாத்து வைத் துக்கொண்டாலவ்வுயிர்வாழ்க்கைக்கு வேண்டும்பொருள் ஒன்றுமின்று யினும் உப்புமூடைகொண் டேர்சென்றுவிற்றாயினும் ஊதியமீட்டிச் சுக மாகவாழலாமென்பதாம். இப்பழமொழிக்கருத்து "ஏதிஜீவந்த மாநந்தோ நரம்வர்ஷசதாதபி" என வான்மீகத்தும்வந்துள்ளது.

* இனியதுநாற்பது செய்யுள்—28.
† திருக்குறள் 97-ம் அதிகாரம் (மானம்) குறள்—1.
‡ இது பொருநராற்றுப்படை 148-ம் அடியுரையின்மேற்கோள்.
¶ இது பிரபந்ததீபிகையில் வழங்கப்பட்டுள்ளது.

106. வாட்டிற லானை வளைத்தார்க ளஞ்ஞான்று
வீட்டிய சென்றார் விளங்கொளி—காட்டப்
பொருவறு தன்மைகண் டஃதொழிந்தா ரஃதா
லுருவு திருவூட்டு மாறு.

எ-து, நாந்தகமென்னும்வாளினாற்றிறலுடையமாயவனைப் பண்டொருகாற் கடலின்கட்புக்குவளைத்த மதுவுங் கைடவனுமென்னு மசுரரிருவருங் கொல்ல வேண்டிச்சென்றவிடத்து அம்மாயவன்றிருவுருவம் விளங்கநின் றொளியைக் காட்ட அவ்வொப்பில்லாத வடிவின்றன்மைகண்டு நினைத்துத் தாஞ்சென்ற கொலையைத்தவிர்ந்தார்கள். அதுவன்றோ அழகியதன்னுருவே செல்வத்தை நுகர்விக்குநெறியாம். எ-று.

(குறிப்பு) இது, உருவுடைமையும் நலனடைவிக்குமென்கிறது. அது இயற்கையானுஞ் செயற்கையானும் இருவகையாம். இயற்கையாலாயது வடிவழகு. இதனை "உருவின்மிக்கதோருடம்பதுபெறுதலு மரிதே"* எனப் பிறருங் கூறினர். செயற்கை அணிவகையானாயது. இவ்விருவகையும் ஒருங்கு திருமாலகத்துண்மையால் அதனையே இதற்குத் திருஷ்டாந்தமாகக்காட்டுகின்றார். 'நாந்தகமென்னும்வாளினாற்றிறலுடையமாயவனை' என்றது நாந்தகமென்னும்வாட்படையாலே தனதாற்றல்தோன்றும்படி அசுரர்களைக்கொன்றமையா லவர்க்குக் குலப்பகைவனாகிய திருமாலை என்றவாறு. இதற்கு, "அசுரரையென்றுந், துணிக்கும்வல்லரட்டன்"† என்பது சான்று. இது மதுவுங் கைடவனுஞ் செற்றங்கொண்டு திருமாலைக்கொல்லக்கருதிவளைத்தற்குக் காரணங்காட்டியபடி. இங்கு 'நாந்தகமென்னும்வாளினாற் றிறலுடைய' என்றதில் வாள் திருமாலின்வலியறிதற்குக்கருவியானமையால் (புகையுடைமையால் மலைநெருப்புடைத்து என்புழிப்போல) ஞாபகவேதுவாயிற்று. வளைத்தார்கள் முற்றெச்சம். வளைத்தார்களாய் வீட்டியசென்றார் எனக் கூட்டுக. 'அம்மாயவன்' என்றது தற்காப்பிற்பராக்காய்ப் பாற்கடலுட் பள்ளிகொண்டு திருக்கண்வளர்ந்தருளும் திருமாலினது என்றவாறு. இதனாலவதானமுள்ளவிடத்து வடிவழகு பிறரை வசப்படுத்துமென்பது சொல்லவேண்டாதாயிற்று. 'அம்மாயவன்றிருவுருவம்' என்னும் எழுவாய், "உருவுதிருவூட்டுமாறு" என்னுங் குறிப்பால் வருவித்

* சீவகசிந்தாமணி—13-வது முத்தியிலம்பகம்—செய்—154.

† திருவாய்மொழி 10—1—9.

துரைக்கப்பட்டது. 'நினைத்துத் தாஞ்சென்றகொலையைத்தவிர்ந்தார்கள்' என்றது தாமவதானத்துடன் செய்துதீர்ப்பதாய் எண்ணிச்சென்ற செயலொழிந்து வியாமோஹித் துயிரழிந்தார்கள் என்றவாறு. இதனால் உருவுடைமைகண்டு நொதுமலர்வயமாதல் சொல்லவேண்டாதாயிற்று. இவ்விருத்தாந்தத்தைக் "காய்ந்திருளை மாற்றிக் கதிரிலகு மாமணிக, ளேய்ந்த பணைக்கதிர்மேல்வெவ்வுயிர்ப்ப-வாய்ந்த,மதுகைடவரும் வயிறுருகி மாண்டா, ரதுகேடவர்க்கிறுதி யாங்கு"* என்பதனானறிக. இதனைச் சிறிதுவிரித்து வேறுபடவழங்குங்கட்டுரைகளுமுள. 'அது' என்றது அங்ஙனம்நிகழ்ந்த நிகழ்ச்சிபோலுநிகழ்ச்சி என்றவாறு. 'அழகிய தன்னுருவே செல்வத்தை நுகர்விக்குநெறியாம்' என்றது உருவுதிருவூட்டும் என்னும் பழமொழிக் கிலக்காகுநெறியாம் என்றவாறு. இங்குச் செல்வத்தை நுகர்தலாவது உள்ளதை இழவாமையும், விரும்பியதடைதலுமாகிய அனுகூலங்களை ஏதிலார்மாட்டும் எய்துதல். இப்பழமொழியைப் பொருள்பற்றி இரக்கப்போனாலுஞ் சிறக்கப்போ என்றுபிறிதோராற்றானும் வழங்குவர்.

107. பெற்றாலுஞ் செல்வம் பிறர்க்கீயார் தாந்துவ்வார்
கற்றாரும் பற்றி யிறுகுபவாற்—கற்றா
வரம்பிடைப் பூமேயும் வண்புன லூர
மரங்குறைப்ப மண்ணா மயிர்.

எ-து, செல்வம்பெற்றாலும் அச்செல்வத்தைப் பிறர்க்குமிடாது தாமு நுகராத கற்றவர்களும் பற்றுள்ளமுடையராய் நெகிழாதே யிறுகாநிற்பர்; கன்றினையுடைய ஆ வரம்பின்கட்கிடந்தபூவினைமேயும் வண்புனலூரனே! மரத்தைக் குறைக்கவல்லகருவிகள் மயிரினைமண்ணமாட்டா; அதுபோல, எ-று.

(குறிப்பு) இது, உலகியல்கூறுவதுபோன்று லோபகுணமுடையாரிடைச்சென்று ஒன்றிரவற்கவென்கிறது. 'செல்வம்பெற்றாலும்' என்றது செலவுசெய்யாதார்க்கு வரவுமில்லையாதலா லுலோபகுணமுடையார் செல்வமுடையாராதலரிது; ஒரோவழி ஊழ்வலியால் அதனையுடையாராயிருப்பினும் என்றவாறு. 'அச்செல்வத்தை' என்றது ஊழ்வலியால் அநாயாசமாய்வந்தசெல்வத்தை என்றவாறு. இதனாற் றாம் மெய்வருத்தமுற்றுத்தேடியவழியும் உலோபித்தல் சொல்ல

* நாலாயிரதிவ்யப்ரபந்தம், இயற்பா, மூன்றாந்திருவந்தாதி-பாசுரம்—66·

வேண்டாதாயிற்று. 'பிறர்க்குமிடாது' என்றது வறியராய்வந் திரந் தார்க்கீந்து மறுமைக்குறுதியுந்தேடாது என்றவாறு. 'தாமு றுகராது' என்றது தாம் ஐம்புலவின்பங்களும் ஆரத்துய்க்கும் இம்மைப் பயனுமிழந்தென்றவாறு. 'கற்றவர்களும்' என்றது செல்வம்நிலையா தென்றும், அஃதுள்ளபோதே இம்மை மறுமைக்காமுறுதிகளைத் தேடிக்கொள்ளவேண்டுமென்றும், உலோபகுணம் ஒழிக்கற்பாலதென் றுங்கூறும் நீதிநூல்களை யோதியுணர்ந்தவராயிருப்பினும் என்றவாறு இதனாற் கல்லாதவரியல்பு சொல்லவேண்டாதாயிற்று. 'பற்றுள்ள முடையராய்' என்றது அச்செல்வத்தில் அபிமானமுடையரா யென்ற வாறு. 'நெகிழாதே' என்றது தாம் வழங்காராயிருப்பவும் அது தானே நழுவும் இயல்புடையதென்பதுணர்ந்து அது நழுவுதற்கிடமுண்டாகாத வாறு என்றபடி. 'இறுகாநிற்பர்' என்றது செல்வம்பெறுதற்கு முன்பிருந்த மனநிலையினும் பெற்றபின்பு மிகவும் இறுகியமனமுடைய ராவர் என்றவாறு. இங்கு நெகிழ்தலும் இறுகுதலும் சினைவினையாய் மனத்தின்றொழிலாகிய குறிப்புணர்த்தி முதலொடுசார்த்தி முடிக்கப் பட்டன. "மரங்குறைப்ப மண்ணுமயிர்" என்பது பழமொழிக்கூற்று. 'மரத்தைக்குறைக்கவல்லகருவிகள்' என்றது தொழிற்படுமிடத்துப் பரிய முழுமரங்களடர்ந்தகாடுகளையுங்களையவல்ல கருவிகள் என்றவாறு. 'மயிரினைமண்ணமாட்டா அதுபோலும்' என்றது நுண்ணியவாயமயிர் களைக்களையுமாற்றலில்லனவாமாறுபோலும்என்றவாறு. மரங்குறைக்கு மீர்வாள் மயிர்களைய மாட்டாது என்பது இதன் பழமொழி. இது கூரிய ஒருதன்மையுடையகருவிகளுள்ளும் ஒருவினைக்குரியது பிறிதொரு வினைக்குதவாதவாறுபோலக் கூரிய அறிவுடையாருள்ளும் ஒருவினைக் குரியார் பிறிதொருவினைக் குரியாகாரென்னும்பொருளில் வழங்கப் படும். இப்பொதுப்பொருளால் உலோபகுணமுடையார் வண்மை யுடையராகார் என்னும்சிறப்புப்பொருள் துணியப்பட்டது. அவர்பாற் சென்றிரவற்கவென்பது குறிப்பாயிற்று. ஒன்றிரக்கவேண்டின் வண் மையுடையார்மாட்டிரக்கவென்பது கருத்து.

108. உள்ளூ ரவரா லுணர்ந்தார் முதலொழிய
மெள்ளாமை வேண்டு மிலங்கிழாய்—தள்ளா
தழுங்கன் முதுபதி யங்காடி மேயும்
பழங்கன்றே றாதலு முண்டு.

எ-று, தன்னுள்ளூரின்கண்வாழுமவர்களாலே யவனுக்குள்ள முதலாகிய பொருளின்சிறுமையையுணர்ந்தேமென்று மனத்தின்கட்கொண்டாராயினும் அவனைப் பொருளிலனென் றிகழாமைவேண்டும்; இலங்கிழாய்! ஒலியினையுடைய முதுபதியங்காடியின்கண் ஓவாதே மெய்ந்துதிரியு முதுகன்று வளர்ந்து வலிய எருதலும் உளதாதலான். எ-று.

(குறிப்பு) இது, வர்த்தகத்துறையிலிருப்பாரை முதலின்சிறுமை பற்றி அத்துறையின் முதன்மிக்குடையராயிருப்பார் எள்ளலாகா தென்கிறது. ‘தன்னுள்ளூரின்கண்வாழுமவர்களாலே’ என்றது முதன் மிக்குடையார் வேற்றூரராக அவர்தம்மிடைத் தனிசுபெற்று வர்த்த கஞ்செய்வானிருக்குமூரின்கண்வாழுமவர்களாலென்றவாறு. இதனால், தம்மூரவனை இகழலாகாதென்பது சொல்லவேண்டாதாயிற்று. ‘அவ னுக்குள்ள முதலாகிய பொருளின்சிறுமையையுணர்ந்தேமென்று மனத் தின்கட்கொண்டாராயினும்’ என்றது அவனுக்குரியதாயுள்ள முதலி னளவு அவன்செய்யும் வர்த்தகப்பெருக்குக்குப் போதாதென்று அறிந் தோம் என்று தெளிந்தாராயினும் என்றவாறு. ‘அவனைப் பொருளில னென் றிகழாமைவேண்டும்’ என்றது போதியமுதலில்லாத காரண மொன்றே பற்றி அவனைத் தொடர்பறக்கலாகாதென்றவாறு. இவை பொருட்கூற்று. இனி வருமவை பழமொழிக்கூற்று. ‘ஒலியினையுடைய’ என்றது பல்லூராருமொருங்கீண்டிப் பற்பலபண்டம்பகர்ந்தும் கொண் டுஞ் செல்லும் என்னுங் குறிப்புணர்த்தி அங்காடியை விசேடித்தபடி. முதுபதி-பெரியவூர். இங்கு முதுச்சொல் முதியாரைப் பெரியா ரென்பதுபோல்வதொரு குறிப்புச்சொல்லாயிற்று. ‘அங்காடியின்கண் ஓவாதேமெய்ந்துதிரியும்’ என்றது காட்டேறிமேயுந்திறனின்றியே உடையான்பேணாமைக்கிலக்கா மெள்ளற்பாடுடையதாய் ஊட்டமின் றிச் சந்ததக்கடையிடையே தஞ்சமென்றுசென்று கழிகூளந்தின்று திரியும் என்றவாறு. முதுகன்று என்றது ஊட்டுநிரம்பாமுன்னம் தாய் வயிறுவாய்த்துப் புனிற்றுவானமையால் ஊட்டற்று வயிறுவைத்த சவலைக்கன்று என்றவாறு. இதற்கு முதுமை இதன்பின்புபிறந்த புனிற்றிளங்கன்றின் இளமைநோக்கிவந்தது. ‘வளர்ந்து வலிய எருதலு முளது’ என்றது தனக்கு ஊட்டங்கொடாதிகழ்ந்துதுறந்த தன் னுடையானுக்கே தான் ஊட்டமளிக்கும் உழவுக்குரியதாய்வளர்ந்து வலியகாளையாதலுமுண்டு என்றவாறு. ‘ஆதலால்’ என்றது ஏது வாசகம். அதனை, இதன் பழமொழிக்கூற்றைப் பிறிதுமொழிதலாக்கி,

வர்த்தகத்துறையிலுள்ளான் சிறியமுதலுடையனுயினும் அவன் பல காலும் இடையருதீட்டும் ஊதியத்தால் மிக்கமுதலுடையனுகி முன்பு தன்னையெள்ளியார்க்கும் ஊதியமளிக்கும் வர்த்தகப்பெருக்குடைய ஞதல்கூடுமாதலால், அவனைப் பொருளிலனென்று இகழாமைவேண்டு மெனக் கூட்டிமுடித்துக்கொள்க. இதன்பழமொழிவடிவம் வந்தவழிக் கண்டுகொள்க.

109. மெய்யா வுணரிற் பிறர்பிறர்க்குச் செய்வதென்
பையா ரகலல்குற் பைந்தொடி—யெக்காலுஞ்
செய்யா ரெனினுந் தமர்செய்வர் பெய்யுமாம்
பெய்யா தெனினு மழை.

எ - து, உண்மைத்தன்மையாலாராயிற் பிறர்க்குப்பிறர்செய்வதென் னுண்டாம், பையாரகலல்குலையும் பைந்தொடியையுமுடையாய்! எப்பொழுதுஞ் செய்யாரென்றுகருதும்படியிருந்தாராயினும் தமராயினரே தமக்கு ஒன்றைச் செய்வார்; தன்பருவத்திற் பெய்ததில்லையாயினும் பின்னையும்பெய்வது மழை யேயாம்; அதுபோல. எ-று.

(குறிப்பு) இது, சுற்றத்தாராயிருப்பார் உற்றுழியுதவாரெனத் தோன்றினும் அவரைத் தழுவியொழுகவேண்டுமென்கிறது.'உண்மைத் தன்மையாலாராயிற் பிறர்க்குப்பிறர்செய்வதென்னுண்டாம்' என்றது தம்சுற்றத்தாரல்லாத பிறராயுள்ளார் தமக் குற்றுழியுதவுவார் போலத் தோற்றத்தாற்காணப்படினும் உண்மைத்தன்மையானுணருங்காற் குறியெதிர்ப்பையுடையராவராதலால் அவர் உதவிசெய்பவ ராகாரென்றவாறு. "பையாரகலல்குற்பைந்தொடி" என்றது உம்மைத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகையாய் மகடூஉமுன் னிலையாயிற்று. இதன் நிலைமொழியாகிய 'பையாரகலல்குல் என்பது அவைபல்கிளவியல்லாமையால் மறைக்கவேண்டாதாயிற்று. இதனைப் "பாசிலைசுருட்டிமைந்தன்கோடுக்கியபரந்துமின்னுங், தூசுலாமல்கு நீண்டத்துயிற்கண்கள்விழித்ததோற்றம்"* என்னுஞ் சிந்தாமணியி னுரையுள், பாசிலைசுருட்டிக்கோடுக்கிய என்னுஞ் சொற்றொடர்ப் பொருளைச்சுட்டி 'வெற்றிலைமடித்துக்கொடுத்தற்கு என்றது இடக்கர்' எனக் குறிப்புரைகூறிய வுரைகாரர், அச்செய்யுளுள்ளேயே,

*சீவகசிந்தாமணி—8—விமலையாரிலம்பகம்—செய்—99.

அல்குல்தீண்ட என்றதற்கு யாதுங் கூறாதுவிடுத்ததே சான்றாகக் காண்க. இவ்வாறு சொல்வழக்கும் மரியாதையறியாத இக்காலத்தொருசாரார், பிற்காலத்துச் சிலர் சிற்றின்பங்கருதிப்பாடிய சிறுபுன்காப்பியங்களில் இடக்கர்ப்பொருளையடக்கியுரைக்கும் ஒரோவிடத்து அரைமுடியென்புழிப்போலக் குறிப்புச்சொல்லாகக்கொண்டு கூறியிருக்கும் குறிப்பையுமுணராது இடக்கர்ப்பொருளுணர்த்தும் வெளிப்படைச்சொல்லெனமயங்கி அவையல்கிளவியெனநினைந்து மறைக்கக்கருதி யிடர்ப்படுவர். அல்குல், இடக்கர்ச்சொல்லாயிருப்பின் 'அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்'* என்னும் இலக்கணநியதி கடந்து சான்றோர்செய்யுளுள்ளே யாண்டும்வழங்கப்படாதாதல் வேண்டும். அங்ஙனமன்றிச் சான்றோர்பலராலும் பலவிடத்தும் வெளிப்பட வழங்கப்பட்டமையாலும், அதற்கோரிடத்தேனும் உரைகாரரொருவரும் அமைவுகூறிச்செல்லாமையாலும், அரவின்படம் இடக்கர்ப்பொருளுக்குவமையாகாமையாலும், ஆடையுடுத்ததோற்றத்தில் அகன்றுபுடைத்துள்ள அரையின்பின்புறத்துக்கே அரவின்படத்தின் பின்புறம் ஒப்பாகக்காணப்படுதலாலும், "கடிதடம் நிதம்பம் அரையே அல்குல்"† என வடமொழிச்சொற்களாகிய கடிதட நிதம்பங்களின்பரியாயமாய் அரையின்பெயராகவேஅல்குல் படிக்கப்பட்டிருத்தலாலும், "பட்டிசைந்த வல்குலாள்"‡ என்பதில் இசைதற்கிடமாயது அரையேயாதலாலும், அதுவே அல்குலின்மரூஉவாகிய அக்குள் என்னுமபெயரால்வழங்கப்படுதலாலும், "பைவிரிபசும்பொனல்குல்"§ என மேகலாபரணமணியப்பட்டவுறுப்பாகச் சொல்லப்பட்டிருத்தலாலும் அல்குல் என்பது இடக்கர்ச்சொல்லாகாதென்றுகூறிமறுக்க. பின்னடியிரண்டும் பழமொழிக்கூற்று. அவற்றுள், முன்னது பொருள்; பின்னது உவமம். 'எப்பொழுதுஞ் செய்பாரென்றுகருதும்படியிருந்தாராயினும்' என்றது துணைங் குறி இங்கிதஞ் செயல்களால் ஒருகாலமும் உதவி செய்யமாட்டாரென்று துணிவுபிறக்கும்படி யிருப்பினும் என்றவாறு. இதனால், உதவிசெய்வரென்றுதோன்றுமிடத்து அவரைத்தழுவி பொழுசவேண்டுமென்பது சொல்லவேண்டாதாயிற்று. 'தமராயினு

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல்—சூத்திரம்—46.
† பிங்கலகண்டு 5-வது ஆடவர்வகை சூ—277.
‡ தலைவரிசைத்தேவாரத்திருமுறை பக்—863.
§ சிவகசிந்தாமணி 1-வது நாமகளிலம்பகம் செய்—356.

தமக்கு ஒன்றைச்செய்வார்' என்றது தம்மொடுதொடர்புடையராகிய சுற்றத்தாரே அவர்தொடர்புபெற்ற தமக்கு ஓரிடருற்றவிடத்துக் கைம் மாறுகருதாது வேண்டுவதோருதவியைச்செய்து அதனைத்தீர்ப்ப ரென்றவாறு. 'தன்பருவத்துப் பெய்ததில்லையாயினும் பின்னையும்பெய் வதுமழையேயாம் அதுபோல' என்றது மழைபெய்யவேண்டுங்காலத்து விபரீதக்குறிகளாற் பெய்யாதென்றுதோன்றினும், அதனொடு காரண காரியத்தொடர்புடையுயிர்களுய்யுமாறு கைம்மாறுகருதாது பின் னும் அதுவேபெய் திடர்தீர்க்குமென்றவாறு. பெய்யுமதுபோலச் செய்வர் எனக் கூட்டுக. ஆதலால் அம்மழையைப் பின்னும் தழுவி யொழுகுமாறே அவரைப் பின்னும் தழுவியொழுகவேண்டுமென்பது குறிப்பாயிற்று. இதன் பழமொழி "செய்யா ரெனினுந் தமர்செய்வ ரென்னுஞ்சொல், மெய்யாதல் கண்டேன் விளங்கிளாய்"* என முத் தொள்ளாயிரத்துள் எடுத்தாளப்பட்டது.

110. கூற்ற முயிர்கொள்ளும் போழ்து குறிப்பறிந்து
மாற்ற முடையாரை யாராயா—தாற்றவு
முல்லை புரையு முறுவலாய் செய்வதென்
வல்லை யரசாட் கொளின்.

எ-து, கூற்றம் தமதுயிரைக்கொள்ளும்பொழுது அவர்சொல்லுமாற்றத்தை யாராய்ந்தன்றுகொள்வது, அதுபோல முல்லைபுரையுமுறுவலையுடையாய்!செய்வ தொன்றுண்டோ? மிகவும்விரைந்து அரசனே பிறரை முறையன்றி யடிமை யாகக்கொள்ளின். எ-று.

(குறிப்பு) இது, கொடுங்கோலரசர்கீழ்வாழுங்குடிகளின் எளிமை கூறுவதுபோன்றுகொடுங்கோலைப்பழிக்கிறது. கூற்றம்—காலக்கடவுள். குறிப்பு—கொள்ளப்படுவாருயிர்பிரிதற்கிசையாமைக்குறிப்பு. குறிப் பறிந் தாராயாதெனக்கூட்டுக. குறிப்பறிதலுமின்றி யாராய்தலுமின்றி என்றபடி. மாற்றமுடையாரையாராய்தலாவது கூற்றங்கொள்ளப்படு வார்கூறுமாற்றங்களையாராய்தல். அம்மாற்றங்களாவன :— வயது சென்ற தாய்தந்தையரும் மனையாளும் சிறுமகாரும்வருந்தாது அவரைப்பாதுகாத்திருந்து வயதுமுதிர்ந்துவருவேனென்றன்முதலி யன. அவற்றையாராய்தலாவது: இது தகும், இது தகாதென்று

*முத்தொள்ளாயிரச் செய்யுட்கள் (சங்கப்பதிப்புப் புத்தகம்) செய்யுள்-41.

தெளிதல்; கொள்வது என்பது கொள்ளும்போழ்தின் என்றதினின்று கொள்ளுதற்றொழில் கூட்டியுரைக்கப்பட்டது. இது உவமை; அது போல என உவமவாசகம் விரித்துரைக்கப்பட்டது. இதன்பொருள், கொள்ளப்படுவார்குறிப்பினையறிதலும், அவர்மொழியுமாற்றங்களையாராய்தலுமாகிய கடமைகளையுஞ்செய்யாது என்பதாம். 'முல்லைபுரையுமுறுவலாய்' என்றது மகடூஉ முன்னிலை. முல்லை-முல்லையரும்பு. புரைதல் - ஒத்தல். முறுவல் - புன்னகையிற்றோன்றும் பல்வரிசை. 'மிகவும்விரைந்து' என்றது எதிர்மாற்றங்கூறுதற்கும் இடங்கொடாதென்றபடி, 'அரசனே' என்றது எளியாரை வலியார் நலியாதுகாக்குமுறையானே பிறர்கொள்ளு மடிமைமுறியும் செல்லாதென்றுவிலக்கி மக்கட்கெல்லாம் ஒத்தசுதந்திரமளித்தற்குரிய அரசன் என்னுங் குறிப்புணர்த்தியவாறு. 'அரசாட்கொளின்செய்வதென்' எனக்கூட்டுக. 'செய்வதொன்றுண்டோ' என்றது அதனைநீக்குதற்குஒருபாயமுமில்லை என்றவாறு. "மருந்தின்று, மன்னவன்சீறின்"* என்றார் பிறரும். கதியற்ற எளியோரை முறையின்றி யாட்கொள்ளுங் கொடுங்கோலரசன் கூற்றுவன்போலுங்கொடியனென்பது குறிப்பு. இதன்பழமொழி, ஊருக்கரசன் கையைப்பிடித்தால் அதுவும் விதிவசம் எனக் கிராம்ய வழக்கில் வழங்கப்படுகிறது.

111. நன்றே யொருவர் துணையுடைமை பாப்பிடுக்கண்
ஞெண்டேயும் பார்ப்பான்கட் டீர்த்தலால்—விண்டோயுங்
குன்றக நன்னாட கூறுங்கா லில்லையே
யொன்றுக் குதவாத வொன்று.

எ-து, ஒருவரைத் துணையாகக்கொண்டு ஒருவன் துணையுடையனாவது நல்லதொன்றேகாண்; பாம்பிற்கடியுண்டு ஒரு பார்ப்பான்பட்ட இடும்பையை அவனால் உதவியைப்பெற்றஞெண்டுதீர்த்தலான் விண்டோயுங் குன்றகநன்னாடனே! சொல்லுங்கால் ஒன்றற்குதவாத வொன்றில்லை. எ-று.

(குறிப்பு) இது, துணையாவாரை அற்பரென் றிகழலாகாதென்கிறது. "நன்றேயொருவர் துணையுடைமை" என்றது பொருள். "பாப்பிடுக்கண், ஞெண்டேயும் பார்ப்பான்கட் டீர்த்தலால்" என்றது எடுத்துக்கொண்டபொருளைக் காட்டுதற்கேற்றதோர் இதிகாசங் காட்டியபடி.

---

* கலித்தொகை மூன்றாவது மருதக்கலி செய்—24.

இவ்விதிகாசம், "நாசிகதேயந்தன்னினண்ணியதத்தனென்பான், றேசிகன்கருமமுற்றச்செல்வனேரூர்க்கென்றேத,வேசுறுவன்னைநீநற்றுணையொடுமேகுகென்றாள், பேசுறுந்துணையின்றென்னப்பின்னுமவ்வன்னையெண்ணி; அலவனைக்கரகத்துட்பெய்தவன்கையிலளிக்கக்கொண்டு, செலும்பொழுதிளைப்பாயாங்கோர்செழுந்தருநிழலிற்றூங்க, நலிதரவிவனைத்தீண்டநல்லரவொன்றுநண்ணிக்,கலசமுட்டலையைநீட்டக்கர்க்கடகந்தான்கண்டே; காரரவெனநினைந்துகடுங்கொடுக்காலிடுக்கி, மாரணஞ்செய்யப்பின்னர்மறையவன்விழித்துப்பார்த்துப், போரவதனைக்கொன்றதாரெனப்பெரிதுமெண்ணித், தேருறுபொழுதுநண்டாற்செத்ததீதெனத்தெரிந்தான்"* என்னும் பஞ்சதந்திரக்கதையுட் சிறிது வேறுபட வழங்கப்பட்டது. "இல்லையே, ஒன்றுக்குதவாதவொன்று" என்றது பழமொழிக்கூற்று. இதனுள் ஒன்றுக்கும், ஒன்றும் என்னும் முற்றும்மைகள் விகாரத்தாற்றெக்கன.'ஒன்றற்குதவாதவொன்றில்லை' என்றது துணையாயிருப்பது எத்துணை நொய்யதாயினும் அதனானும் ஒருதவியுளதாகுமென்னுங் குறிப்புணர்த்திப் பொருளைமுடித்தற்கு ஏதுவாய்நின்றது. ஆதலாற் றுணையாவாரை யற்பரென் றிகழலாகாதென்பது கருத்தாயிற்று. இதன் பழமொழி ஒன்றுக்குமுதவாத தொன்றுமில்லையென்பதாம். இது உதாரணவகையாற் "சிறுதுரும்பும் பல்லுக்குத்தவுதவும்" என வழங்கப்படும்.

112. ஆண்டீண் டெனவொன்றோ வேண்டா வடைந்தாரை
மாண்டிலா ரென்றே மறைப்பக் கிடந்ததோ
பூண்டாங் கிளமுலைப் பொற்றொடி பூண்ட
பறையறையார் போயினா ரில்.

எ-து, அன்றொருகுற்றஞ்செய்தார் இன்றொருகுற்றஞ்செய்தாரென்று அடைந்தாரைச் சொல்லவேண்டா; அவர்கள் மாட்சிமையுடையாரல்லரென்று நட்புத்தவிர்கைக்குக்கிடந்ததொரு நீதியுண்டோ;பொறுத்து நட்பாகவேகொண்டு வேண்டுவனசெய்க; பூண்டாங்கிளமுலைப்பொற்றொடி! தாம்பூண்டபறையை யறையாது இடையே தவிர்ந்தாரில்லையாகலால் எ-று.

---

* பஞ்சதந்திரக்கதை ஐந்தாவது அசம்பிரேக்ஷியகாரித்துவதந்திரம் செய்–118—120.

(குறிப்பு) இது, நண்புடையாராயினாரைப் பின்பு மாட்சிமையிலரென்று தெரிந்து விலக்கலாகாதென்கிறது. ஒன்றாேவென்றதை ஆவர்த்தி செய்து அடைந்தாரை ஆன்டொன்றோ, ஈண்டொன்றோவென வேண்டா எனக் கூட்டுக. அடைந்தார்-நட்புக்கொண்டு தம்மையடைந்துள்ளார். ஆண்டொன்றோ என்றது அன்றுசெய்தகுற்றமொன்று மட்டுமோ என்றபடி. ஈண்டொன்றோவென்றதற்கும் இவ்வாறுரைத்துக்கொள்க. இவையிரண்டும் பிழைபொறுப்பிப்பாரைநோக்கிப் பிழையுடைமையின்வியாப்திதோன்றக்கூறியகூற்றின் அநுவாதமாய் மறைவினைக்கு விசேடமாயின. 'மாட்சிமையுடையா ரல்லரென்று நட்புத்தவிர்கைக்குக்கிடந்ததொருநீதியுண்டோ' என்றது பிறரால் விரும்பத்தகாத கடுமொழிகூறன்முதலிய குணமின்மைகாரணமாக நட்புத்தவிர்தல் நீதியொடுபடாதாதலால் என்றவாறு. 'பொறுத்து' என்றது மாட்சிமையின்மையானாகிய பிழைகளைப்பொறுத்து என்றவாறு. மாட்சிமை இங்கு இனியமொழிகூறன்முதலிய குணமுடைமை. 'வேண்டுவனசெய்க' என்றது செய்யக்கடவகடமைகளைச் செய்துபோதுக என்றவாறு. 'பூண்டபறைபறையார்போயினாரில்' என்பது பழமொழிக்கூற்று. 'தாம்பூண்டபறையையறைபாது இடையேதவிர்ந்தாரில்லையாகலால்' என்றது வேந்தனதாணையையறிவிக்கும் பறையர் தாம் விரும்பிப்பூண்டபறையைச் சிறிதுதூரமடித்துச்சென்று பின்பு அது செவிக்கினியவொலியுடையதாயில்லையென்றுணர்ந்தும் அதனை முடிவுபோகப்புரியாது இடையே தவிர்ந்தொழிதலில்லையாதலால் அதுபோலத் தாங்கொண்ட நட்புத்தவிர்கைக்கும் நீதியில்லை எனக் குறிப்பெச்சங் கூட்டிமுடிக்கற்பாற்று. இதன்பழமொழி, தோளிலே பறை மாட்டிக்கொண்டவர் தொண்டியறையக்கூசுவதேன் என்பதாம். இதன் பொருள் பிறிதுமொழிதலாய், குணமில்லார்நட்புக் கொள்ளலாகாது; கொண்டபின்பு அதனைத் தள்ளலாகாது. என்னும்பொருளில் வழங்கப்படும். இது இங்கு எடுத்துக்கொண்டபொருள் துணிதற்குக்காட்டிய ஏதுவைகாட்டும் பிரமாணவாக்கியமாயிற்று.

113. *இடைபி டுடையா ரிவரவரோ டென்று*
*தலையாயா ராய்ந்துங் காணார்—கடையாயார்*
*முன்னின்று கூறுங் குறளை தெரிதலாற்*
*பின்னின்ற பேதையார் நட்பு.*

எ-து, தமக்கு நட்பாயினரைச் சிலர் குறலையுரைத்தால் அவரோடு இவர் வேறுபாடுடையராயுரைத்தாரென்றுகருதித் தலையாயினர் அக்குறலையை ஆராய்ந்துங்காணார்; இனிக் கடையாயினர் தங் நட்டாரைப் பிறர்வந்து குறலைசொல்லியக்கால் அதனை மெய்யாகக்கொண் டங்நட்பைவிடுவராதலாற் கடைக்கால் இன்னாதாயேவிடும் பேதையாரோடுகொண்டநட்பு எ-று.

(குறிப்பு) இது, கடையாயபேதைதமையுடையாரோடு நட்புக் கொள்ளலாகாதென்கிறது. 'தமக்குநட்பாயினரைச் சிலர்குறலையுரைத்தால்' என்பது "முன்னின்றுகூறுங்குறலை" என்றதன்குறிப்பால் வருவித்துரைக்கப்பட்டது. 'தமக்கு' என்றது தலையாயினர்க்கு என்றவாறு. 'குறலையுரைத்தால்' என்றது பொய்க்குற்றங்கூறினல் என்றவாறு. குறலை குறளையெனப் போலியெழுத்தானும் வழங்கப்படும். வேறுபாடு - பகைமை. 'தலையாயினர்'-அறிவுடைமையாற்சிறந்தார். 'ஆராய்ந்துங்காணார்' என்றது ஒருசொல்லாய் ஆராய்தல்தானுஞ் செய்யார் என்னும் பொருள்படநின்றது. ஐயுறவுமாட்டார் என்பது கருத்து. உம்மையால் அதனை நம்பமாட்டாரென்பது தானேபெறப்பட்டது. ஆதலால் அவர்நட்பேகொள்ளற்பாற்றென்பது குறிப்பு. இதனுல், தள்ளற்பாலது கூறுமுகத்தாற் கொள்ளற்பாலதும் உடன் கூறப்பட்டது. 'இனி'யென்பது ஆநந்தர்யக்குறிப்புணர நின்றது. கடையாயினர் - அறிவின்மையானிழிந்தார். பிறர் - தங்நட்டார்க்குவிரோதிகள். பேதையார் என்பது அவர் என்பதுபடச் சுட்டுப்பெயராய் நின்றது. பேதையாரோடுகொண்டநட்புக் கடைக்கா லின்னுதாயே விடும் எனக் கூட்டுக; ஆதலா லவர்நட்புக் கொள்ளற்பாற்றன்றென்பது குறிப்பு. பின்னேதெரியும் பேதையார்நட்பு என்பது இதன்பழமொழி.

114. தெற்ற வொருவரைத் தீதுரை கண்டக்கா
லற்றே யவரைத் தெளியற்க—மற்றவர்
யாவரே யாயினு நன்கொழுகார் கைக்குமே
தேவரே தின்னினும் வேம்பு.

எ-து, தெளிய வொருவர் ஒருவரைத் தீதுரைக்குமுரையைக்கேட்டால் அத்தீதுரைக்கின்றவவரை நம்மையும் இப்பெற்றியே யுரைப்பரென்று உறவாகத் தேருதொழிக. யாவரே நட்புக்கொண்டாராயினும் மற்றவர் நன்கொழுகார்; தேவரேதின்முராயினும் வேம்பு கைக்குமதுபோல எ-று.

(குறிப்பு) இது, பிறர்பழிகூறுவாரோ டுறவுகொள்ளலாகாதென்கிறது. தெற்றக்கண்டக்கால் எனக்கூட்டுக. ஒருவரையென்னு மிரண்டனுருபு தீதுரையென்னும் அடையடுத்தமுதனிலைவினைகொண்டுமுடிந்தது. தீதுரைத்தலாவது ஒருவர்க்குள்ள குணதோஷங்களுள்ளே குணமொழியக் குற்றங்களையே யெடுத்துக்கூறுதல். 'நம்மையும் இப்பெற்றியேயுரைப்பர் என்று' என்றது உறவாகத்தேறுதொழிதற்கு ஏதுவாகிய ஞாபகம் வருவித்துரைத்தபடி. உறவு-சகவாஸயோக்யமான நட்பு. இங்கு, தெளிந்துகொள்ளற்பாலது உறவாதலா லது தெளிவுக்கடையாய் வருவித்துரைக்கப்பட்டது. 'யாவரேநட்புக்கொண்டாராயினு'மென்றது நட்புக்கொண்டா ரெத்துணைசிறப்புடையராயினும் என்றவாறு. இதனாற் சிறப்பில்லாதாரை யவர் பழிப்பது சொல்ல வேண்டாதாயிற்று. இங்கு நன்கொழுகலாவது பிறர்பழிகூறாமை. "கைக்குமே, தேவரேதின்னினும்வேம்பு" என்பது பழமொழிக்கூற்று. இது இங்குச் செம்பொருள்படக்கூறுந் திட்டாந்தமாயிற்று. இதனை, இன்னமுதச்சுவையொன்றேயுணருந் தேவருண்டாலும் வேம்பு தன்னியல்பான கைப்பொழியாமையால் வெறுக்கப்படுமாறுபோல, குணமொன்றேவிரும்பு முயர்ந்தோர் உறவுகொண்டாலும் அவர்மாட்டு மிழிந்தோர் தம்மியல்பான பழிகூறலையொழியாமையால் வெறுக்கப்படுவர் எனப் பொருளொடுபொருத்தியுரைத்துக்கொள்க. இதன்பழமொழி வெல்லந்தின்றாலினிக்கும் வேம்புதின்றாற்கசக்கும் என வழங்கப்படும். இது, "அக்காரம், பாவரேதின்னினுங்கையாதாங்கைக்குமாந், தேவரேதின்னினும்வேம்பு" என நாலடியாருள்* வழங்கப்பட்டது.

115. அகல முடைய வறிவுடையார் நாப்பண்
புகலரியார் புக்கவர் தாமே—பிகலினல்
வீண்சேர்ந்த புன்சொல் விளம்ப லதுவன்றே
பாண்சேரிப் பற்கிழிக்கு மாறு.

எ-று, விரிந்தகன்றவறிவினையுடையார்நடுவேபுகுதற்குத்தகாதார்புக்கவர்தாமாறுபாட்டினாற் பயனில்லாத புல்லியசொற்களை வலியத் தாமேசொல்லுதலது வன்றே பாணரிருந்தசேரியினுள்ளேபுக்குப் பிறனொருவன் பாடுவேமென்று பற்றேன்ற வாயைத்திறந்தபாடுநெறி எ-று.

* நாலடியார் 12-ம் அதிகாரம் (மெய்ம்மை) செய்—2.

(குறிப்பு) இது, கல்வியறிவில்லாதார் அவ்வறிவான்மிக்கா ரவையிடைக் கல்லாதமேற்கொண்டு வாதுசெய்யலாகாதென அவையறிதலின்வகை கூறுகிறது. 'விரிந்தகன்றவறிவினையுடையார்' என்றது இயற்கையானுஞ் செயற்கையானு மிக்கவறிவினையுடையார் என்றவாறு. இயற்கையானுயது குலபரம்பரையானும், ஊழானுமாயது. செயற்கையானுயது கல்வியானுயது. 'புகுதற்குத்தகாதார்' என்றது அவ்விருவகையறிவுமில்லாதார் என்றபடி. புகலருமை ஈண்டுப் புகுதற்குத்தகுதியின்மையுணாநின்றது. புக்கவர் வினையெச்சம். 'மாறுபாட்டினுல்' என்றது அவரை வாதில் வெல்லக்கருதி என்றபடி. 'வீண்சேர்ந்த' என்றது வீணுன என்றபடி. இது ஒருசொன்னீர்மைத்து. "கொன்சேரல்குன்மேகலை"* என்ருர் பிறரும். 'பயனில்லாத புல்லிய சொற்களை' என்றது அவர்சொல்லுஞ்சொல்வி னியல்பு கூறியபடி. 'வலியத் தாமேசொல்லுதல்' என்றது அவர் விரும்பாமைக்குறிப்புணர்த்தியபடி. விளம்பல்கூடாதென வொருசொல்வருவித்துப் பொருளைமுடித்துக்கொள்க. அதுவென்றது அங்ஙனம்விளம்புதல் என்னும் பொருளுடையதாய் நிரூபகவாக்கியத்துக் கெழுவாயாய்நின்றது. பாணர் - இசையொடுபாடவல்லார். சேரி - ஒருசாதியராய்ச் சேர்ந்து குடியிருக்குமிடம். 'பிறன்' என்றது இசையொடுபாடவல்லோனல்லனென்றபடி. 'ஒருவன்' என்றது உதாசீனக்குறிப்புணரநின்றது. 'பாடுவேமென்று' என்றது பாடிவெல்வேமென்றெண்ணி என்றவாறு. 'பற்றேன்றவாயைத்திறந்து' என்றது உபலக்ஷணவகையால், பாடுதற்கண் ணிகழலாகாதென்று விலக்கிய அங்கசேஷ்டையுடன்கூடியென அவரியல்பு கூறியபடி. அவ்வங்கசேஷ்டைகளாவன: 'வயிறதுகுழியவாங்கல் அழுமுகங்காட்டல் வாங்குஞ்' செயிரறுபுருவமேறல் சிரநடுக்குறல் கண்ணுடல், பயிறருமிடறுவீங்கல் பையெனவாயங்காத்தல், எயிறதுகாட்டல்"† என்பனவாம். 'பாடுநெறி'என்றது பாடியமுறைபோலும் பயனற்றதா யிகழற்பாடளிக்குமாதலால் என்றவாறு. இதன்பழமொழி, இசைவல்பாண்சேரி யிக்காலத்தில்லாமையால் வழக்கின்றிவீழ்ந்ததுபோலும்.

---

* கம்பராமாயணம், மிதிலைக்காட்சிப்படலம், செய்யுள்—31.

† திருவிளையாடற்புராணம், விறகுவிற்றபடலம் செய்யுள்—29.

116. அமர்விலங்கி யாற்ற வறியவும் பட்டா
ரெமர்மேலை யின்னரா வியார்க்குரைத்து மென்று
தமர்மறையாற் கூழுண்டு சேற லதுவே
மகன்மறையாத் தாய்வாழு மாறு.

எ-து, போரின்கட்பகைவரைவிலங்கி மிகவு மெல்லாராலு மறியவும்பட்டா ரெங்குடியிலுள்ளார் பண் டிப்பெற்றியாரா லித்தன்மையை யாவர்க்குச் சொல்லுவோமென்று பிறர்க்குச்சொல்லித் தங்குடியில்வந்து முன் மேம்பட்ட தமராலே சோறுபெற்றுண்டொழுகுத லாகாது; அயலான்பெற்ற மகனாற் பெற்ற தாய் தன் கணவனோடு வாழுமாறுபோலுமது எ-று.

(குறிப்பு) இது, வினைசெய்வோர் தம்முரியோர்க்குதவாதுநின்றே குலநலம்பேசிவாழ்தல் கூடாதென் றுபழிக்கிறது. 'போரின்கட்பகையை விலங்கி' என்றது தமக்குரியோருடையபகைவரைப் போரிடைச்சென் றெறிந்துவென்று என்றவாறு. 'எல்லாராலுமறியவும்பட்டார்'என்றது பிரசித்திபெற்றவர் என்றவாறு. 'இப்பெற்றியர்' என்றது இவரிவ ரென அவரவர்பெயரைச்சுட்டி இத்துணையர் என்றபடி. 'யாவர்க்குச் சொல்லுவோமென்று பிறர்க்குச்சொல்லி' என்றது நாமொருவர்க்குஞ் சொல்லவேண்டியதில்லையென்று சொல்லிக்கொண்டே பிறர்க்குச்சொல் லித் தம்முரிமையைப்புலப்படுத்திக்கொண் டென்றவாறு. தமராலே சோறுபெற்றொழுகுதலாவது, இங்குத் தமர்செய்தநன்மையைச் சொல்லி யதனைத் தம்மதாக்கி யந்நன்மையிற் றம் நலனின்மையை மறைத்துத் தாம் நல்லமென் றுகாட்டி உரியோனுழைச் சோறுபெற்று வாழ்தல்; இதுபொருள். இனிவருவ துவமம். அயலான்பெற்றமகனாற் பெற்றதாய் தன்கணவனொடுவாழ்தலாவது, தன்கணவனுக்குநலனளி யாத பட்டியொருத்தி, தான்பெற்றமகன் றன்கணவனுக்குச்செய்புநன் மையைச்சொல்லி யதனைத்தன்னதாக்கி யதனிற் றன்னலனின்மையை மறைத்துத்தன்னை நல்லளென் றுகாட்டிக்கணவனிடைச் சோறுபெற்று வாழ்தல். இங்கு,உடையோனுக்குநலனளியாதஉரியான் றன்குலத்தார் நலனளித்துப்பெற்றகீர்த்தியிற் றனக்குரிமையுடைமைபற்றி யதன்சார் பினூலுரியோனிடைபுணவுபெறுதல், கணவனுக்கு நலனளியாதமனை யாள் பிறனிடைப்பிறந்தபுதல்வனிடைத் தனக்குரிமையுடைமைபற்றி யவன் சார்பினாற் கணவனிட முணவுபெறுதல்போல சிந்திக்கத்தக்க தெனப் பொருளொடுபொருத்தியுரைத்துக்கொள்க. இதனால் உடை யோனுக்குரியோன் றானே நன்மைபுரிந்தொழுகவேண்டுமென்பது குறிப்பாயிற்று. இதன்பழமொழிவடிவம் வந்தவழிக்கண்டுகொள்க.

117. தாயானுந் தந்தையா லானு மிகவின்றி
வாயின்மீக் கூறு மவர்களை யேத்துத
னோயின் றெனினு மடிப்பின் கடைமுடங்கு
நாயைப் புலியா மெனல்.

எ-து, தம்மைப்பெற்ற தாயாலேயாக தந்தையாலேயாக யாதுமொருசிறப் பின்றித் தம்வாயாலே தம்மை மீக்கூறுமவர்களைப் பிறரேத்துதல், நோயில்லையா யினு மடிப்பின்மருங்கேமுடங்கு நாயினைப் புலியென்றுசொல்லுதலோடொக்கும் எ-று.

(குறிப்பு) இது, குலத்தானும் வினைநலத்தானுஞ்சிறவாதார்க்கு அவர்பேசுந்திறங்கொண்டே நன்மதிப்புரைவழங்கலாகாதென்கிறது. நோயின்றெனினும் என்னும் உவமையடையை யுருபுதிரித்து நோயில ராயினுமெனப்பொருளொடுங்கூட்டிச் சரீரதிடமுடையராயிருப்பினு மெனப் பொருளுரைத்துக்கொள்க. இதனாற் சரீரதிடமில்லாதவழி நன்மதிப்புரைவழங்கலாகாதென்பது சொல்லவேண்டாதாயிற்று. 'தம் மைப்பெற்ற' என்றது ஔரஸஸம்பந்தமுடைமைதோன்றக்கூறியவாறு. இதனைத் தந்தையொடுங்கூட்டுக. இதனால் எடுப்புத்தாய் தந்தையர் சிறப்புப்பற்றியுரைப்பது விலக்கப்பட்டது. 'தாயாலேயாக தந்தையாலே யாக யாதுமொருசிறப்பின்றி' என்றது ஒருவர்க்குத் தாய்மரபு தந்தை மரபு என்னு முபயகுலத்தாலும் அறிவு ஊக்கம் ஆற்றல் முதலியகுண விசேடங்களாற் சிறப்புண்டாகவேண்டும்; அங்ஙனமில்லையாயினு மவற் றுள் யாதேனுமொருகுலத்தாலாயினும் யாதேனுமொருசிறப்பிருக்க வேண்டும்; அதுவுமின்றி என்றவாறு. 'தம்வாயாலே தம்மைமீக்கூறு மவர்களை' என்றது தம் தகுதியுடைமையைச் செயலாலே கண்கூடாக வாயினும், கண்கூடாகக்கண்டபிறர்கூறும் ஆப்தவாக்கியத்தாலாயினும் காட்டமாட்டாது தாமே தம் தொழிற்றிறமையையுயர்த்திக்கூறுமவர் களை என்றவாறு. இங்குத் தம்வாயாலே மீக்கூறும் என வேண்டாது கூறியகூற்றாற் செயலாலே கண்கூடாகக்காட்டமாட்டாதென்பதும், கண்கூடாகக்கண்டபிறர்கூறும் ஆப்தவாக்கியத்தாற் காட்டமாட்டா தென்பதும் பெறப்பட்டன. 'பிறர்' என்றது குறித்துநின்றதொழிற் றுறையுடையாருக்கயலாராகிய வுதாசீனர் என்றவாறு. 'ஏத்துதல்' என்றது இவர் விரும்பியகருமமுடித்தற்குரிய அறிவூக்கமாற்றன்முத லியகுணவிசேடங்களாலுந் தொழிற்றிறமையாலும் மிக்கார் என நன் மதிப்புரைவழங்கல் என்றவாறு. இது பொருள். இனிவருவ துவமை.

'நோயின்றெனினும்' என்றது சரீரதிடமுடையதாயிருப்பினும் என்றவாறு. 'தாயானுந்தந்தையாலானுமிகவின்றி வாயின்மீக்கூறும்' என்னும் பொருட்பண்பை உவமைக்கண்ணு மேற்றபெற்றியேற்றி, கோம்பைப் பிறவி, இருபிறவி என்பதுபோலப் பிறப்பானுஞ்சிறப்படையாதுளனப் பொருளுரைத்துக்கொள்க. அடுப்பு இங்கு ஆகுபெயராய்ச் சமையற் புரையையுணர்த்திப் பொருளின்கட் டொழிற்றுறைகுறித்துநின்றது. 'அடுப்பின்மருங்கேமுடங்கும்நாயினைப்புலியென்றுசொல்லுதலே லாடொக்கும்' என்றது வேட்டுவரோடு காட்டிடைச்சென்று வேட்டையாடுந்திறங் காட்டமாட்டாது எச்சிற்கல்லைநக்கி யெளிதி னுயிர்வாழ விரும்பி அடுக்களைப்பக்கத்திருந்து புதியாரைக்கண்டுகுரைக்குநாயைச் சுட்டி, வேட்டுவரைநோக்கி ஒருவர் இது புலிபோலும்வீரமுடையதென்றாற்போலும் மதிக்கற்பாடிலதாம் என்றவாறு. இதன்பழமொழி, நல்லதைப் புல்லிதேன்பார் நாயைப்புலியேன்பார் என அறிவிலார்கூறுந் தகவொழிகூற்றின் அநாதரக்குறிப்பில் வழங்கப்படும்.

118. கட்டுடைத் தாகக் கருமஞ் செயவைப்பிற்
பட்டுண்டாங் கோடும் பரியாரை வையற்க
தொட்டாரை யொட்டாப் பொருளில்லை யில்லையே
யட்டாரை யொட்டாக் கலம்.

எ-து, அறனுடைத்தாம்வகை யொருகருமத்தை யொருவரைச்செய்யவைப்பி னக்கருமத்தையுளப்பட் டதன்கணுள்ளபயனைத் தாமுண்டுசெல்லும் பரிவிலாதாரை யக்கருமத்தின்கண்ணே வையாதொழிக; ஒருபொருளைக் கையாற்றொட்டாரையொட்டாதபொருளில்லை ; யட்டாரைப்பொருந்திப் பயன்படாதகலமுமில்லையாதலான் எ-று.

(குறிப்பு) இது தன்னயக்கருதுமியல்புடையாரைத் தருமகர்த்தராக நியமிக்கலாகாதென்கிறது. கட்டழிதல் அறனழிதலாதலாற் கட்டுடைமையென்றது அறனுடைமையாயிற்று. கட்டு-நியதி. உளப்படல் - மனமிசைந்தேற்றல். அதன்கணுள்ளபயன் என்றது அறப்பொருட்டாய்வைத்த கருமத்தின்கணுளவாதற்குரியபொருளை என்றவாறு. 'தாமுண்டுசெல்லும்பரிவிலாதாரை' என்றது அவ்வறத்திலபிமானமின்றித் தாமுண் டுயிர்வாழவிரும்புமியல்புடையாரையென்றபடி. பின்னடியிரண்டு மிரண்டுதொடராலிணைந்ததொரு பழமொழிக்கூற்று.

இது ,இங்கு எடுத்துக்கொண்டபொருளை நாட்டுதற்குக்காட்டிய ஏது வசனமாய்நின்றது.'ஒருபொருளைக் கையாற்றெட்டாரை யொட்டாத பொருளில்லை'யென்றது அபகரித்துங்கொள்வாரை யடையாதபொரு ளொன்றுமில்லை யென்றபடி. இங்குக் கையாற்றொடுதல் அபகரித்தற் பொருளில்வழங்கும் கைவைத்தல்என்னுங் குறிப்புமொழியின் பரியாய மாயிற்று. 'அட்டாரைப்பொருந்திப் பயன்படாத கலமுமில்லை' யென் றது பிறிதுமொழிதலாய், வினையாளர்க்குதவாத வினைக்களமுமில்லை யென்னுங் குறிப்புணரநின்றது. இது எடுத்துக்கொண்டபொரு டுணிதற்கேதுவாய்நின்றமையால் ஆதலான் என ஏதுவசனம் வருவித் துரைக்கப்பட்டது. ஆதலாற் பரிவில்லாதாரை வையாதொழிகவெனக் கூட்டிமுடித்துக்கொள்க.

119. ஒற்கந்தா முற்ற விடத்து முயர்ந்தவர்
நிற்பவே நின்ற நிலையின்மேல்—வற்பத்தாற்
றன்மே னலியும் பசிபெரி தாயினும்
புன்மேயா தாகும் புலி.

எ-து. வறுமைதாமுற்றவிடத்துமுயர்ந்தவர்நின்றநிலையின்கண்வழுவாதே நிற்பர். மிகவுந்தன்மாட்டுநலியும் பசிபெரிதாயினும் புலிபுல்லினைமேயாதாகுமது போலவென்றவாறு.

(குறிப்பு) இது, தருமகர்த்தராகநியமிக்கத்தக்காரிவரென்கிறது. 'வறுமைதாமுற்றவிடத்து முயர்ந்தவர் நின்றநிலையின்கண் வழுவாதே நிற்பர்' என்றது குடிப்பிறப்பானு மொழுக்கத்தானு முயர்ந்தவர் தாமுணவின்றிவருந்தியகாலத்தும் அவர்,தமக்குரியபயன்கிடைத்தபோ ததனை நுகர்வதன்றித் தம்மொழுக்கங்கெடுமாறு தமக்குரியதல்லாத தொருபொருளையும் தாம் நுகரவிரும்பார் என்றவாறு. நிலை-ஒழுக்கம். இதனல் அவர் செல்வமுமுடையராயிற் றமக்குரியதல்லாததொரு பொருளையும் நுகராரென்பது சொல்லவேண்டாதாயிற்று. இது ஏது. ஆதலாலவரே தருமகர்த்தராகநியமிக்கத்தக்கார் என்பது குறிப்பு. இது பொருள். வற்பமென்னுங்குறிப்புமொழி உணவுகிடையாமைப்பொரு ளுணரநின்றது. பின்னடியிரண்டும் பழமொழிக்கூற்று. இதன்பழ மொழி "புலிபசித்தாற்புல்லைத்தின்னுமா" எனவழங்கப்படும். இதன் பொருள் குலபரம்பரையாய்வந்தநியமத்தாற்சிறந்த புலியேறு மிக்க

பசியால் வருந்தியவிடத்தும் அது தனக்குரியதல்லாத புல்லைத்தின்ன விரும்பாதவாறுபோல, குடிப்பிறப்பாயமைந்தநியமத்தாற் சிறந்தார் மிக்கவறுமையுற்றகாலத்தும் அவர்தமக்குரியதல்லாத பொருளை நுகர்ந் துயிர்வாழவிரும்பார் என்பதாம். இது இங்கு எடுத்துக்கொண்ட பொருளை நாட்டுதற்குக் காட்டிய ஏதுவைநாட்டும் பிரமாணவாக்கிய மாயிற்று. இங்ஙனமன்றி இப்பாட்டு உயர்ந்தவரதியல்புகூறியதெனக் கொண்டு செம்பொருளொன்றேயுணர்த்தித் திட்டாந்தமாய்நின்ற தெனினுமாம். இப்பழமொழி "இடுக்கண்டலைவந்தக்கண் ணுமரிமாக், கொடிப்புற்கறிக்குமோமற்று" என நாலடியுள்ளும்* "செங்கட்புலியே றறப்பசித்துந்தின்னுவாம், பைங்கட்புனத்தபைங்கூழ்"* என நீதிநெறி விளக்கத்துள்ளும். "புலி புற்றின்னுதெனத்" திருக்குறளுரையுள்ளும் எடுத்தாளப்பட்டது.

120. பன்னாளு நின்ற விடத்துங் கணிவேங்கை
நன்னாளே நாடி மலர்தலான்—மன்ன
ருவப்ப வழிபட் டொழுகினுஞ் செல்வந்
தொகற்பால போழ்தே தொகும்.

எ-து, பலநாளுந்தானுளதாய்நின்றவிடத்துங் கணிகளைப்போலநாளையறி விக்கும்வேங்கை தாமலரக்கடவநாளையறிந்துபூத்தலா லரசர்மனமகிழும்படி வழி பட்டொழுகினாராயினுமொருவர்க்குப்பொருள்கூடுங்காலத்தேவந்து கூடுமல்லது கூடாதென்றவாறு.

(குறிப்பு) இது, ஒருவர்செல்வமடைதற்குக் காலமும் ஒத்துவர வேண்டுமெனக் காலமறிதல்கூறுகிறது. 'பலநாளுந்தானுளதாய்நின்ற விடத்தும்' என்றது பூத்தற்குமுதற்காரணமாகியதானும், காலவிசேட மொழிந்தபிறகாரணங்களும் மற்றைக்காலங்களிலெல்லாமுள்ளனவா யிருப்பினும் (கணிவேங்கைமலர்வதன்று) என்றவாறு. இது ஒரு காரியத்தோற்றத்திற்கு அதற்குரியகாலவிசேடமும் காரணமாமென வெதிரேகதிட்டாந்தங்காட்டியபடி. கணிவேங்கை-கணியாகியவேங்கை. இது வேங்கையென்னும் பலபொருளொருசொல்லின்குறிப்பொழித்து வேங்கைமரமென வெளிப்படையாக்கவந்த இருபெயரொட்டு. 'கணி களைப்போலநாளையறிவிக்கும்' என்றது சோதிடகணிதம்வல்லாரைப்

---

* நாலடியார் 15-ஆம் அதிகாரம் குடிப்பிறப்பு செய். 1. நீதிநெறிவிளக்கம் செய். 61. திருக்குறள் உஅ-ம் அதிகாரம் கூடாவொழுக்கம் செய். 3-ன்உரை.

போலப்பருவகாலவிசேஷத்தைத்தவறுதறிவிப்பதுஎனக்கணிஎன்னும் பெயரின்காரணவாற்றல்காட்டியதுணையாய்நின்றது. 'வேங்கை தாமலரக்கடவநாளையறிந்துபூத்தலால்' என்றது வேங்கைமரம் தான் பூத்தற்கனுகூலமாகியபருவகாலவிசேடம்வாய்த்தவிடத்துத் தப்பாது தன்காரியமாகியபூத்தலையடையுமாதலால் என்றவாறு. இது, காரிய சித்திக்குக் காலவிசேடமும் காரணமாமென்பதை அந்நுவயதிருஷ்டாந் தத்தாற்காட்டியபடி. ஈண்டுஆ லுருபுஞாபகவேதுப்பொருண்மையுணர நின்றது. 'அரசர்மனமகிழும்படிவழிபட்டொழுகினராயினும்' என்றது ஒருவர்பொருள்கூட்டுதற்குப் பிறகாரணங்களாகிய தாம்செய்தொழு கும் அரசன்வழிபாடும், அவ்வழிபாடுகொள்ளுமரசனும், அவனுக்கதில் விருப்பமும், அவ்விருப்பானுவந்தளித்தற்கு அவன்மாட்டுப்பொருளும் மற்றைக்காலங்களிலிருப்பினும் என்றபடி. 'ஒருவர்க்குப் பொருள் கூடுங்காலத்தேவந்துகூடுமல்லதுகூடா'தென்றது தாம்பொருளுடைய ராதற்குரியகாலவிசேடத்தாற்கிட்டுவதல்லது மற்றைக்காலத்திற் கிட்டாதென்றவாறு. பொருள்கூட்டுதற்கேற்ற காலவிசேடம்வாய்த்த விடத்துத் தவறவிடலாகாதென்பதுகுறிப்பு. இங்குக் காலவிசேட மென்றது தம் காரியசித்திக்கனுகூலமாகியசந்தர்ப்பத்தை யொட்டி யிருக்கும் காலமெனவுணர்க. இதன்பழமொழி செய்கிறவேலையைச் செய்துவந்தாற்கிடைக்கிறபோதுகிடைக்கும் எனச்செம்பொருளில்வழங் கும் அடிப்பட்டவழக்காயுள்ளது.

121. காடுறை வாழ்க்கைக் கடுவினை மாக்களை
நாடுறைய நல்கினு நன்கொழுகார்—நாடொறுங்
கையுள தாகி விடினுங் குறும்பூழ்க்குச்
செய்யுள தாகு மனம்.

எ-து, காடுறையும்வாழ்க்கையையுடைய கொலைத்தொழிலையுடையமக்களை நாட்டின்கணுறையவொருவர்நல்கினுங் கொலைத்தொழின்முதலானவற்றைத் தவிர்ந்துநன்றாகவொழுகமாட்டார். நாடோறுங்கையுளே மருவிவளரினுங் குறும் பூழ்க்குச் செய்யின்கண்ணேயுறையவேண்டுமெனமே யுள்ளததுபோல எ-று.

(குறிப்பு) இது, புல்லோரை நல்லொழுக்கமுடையாராகத்திருத்த லரிதென்கிறது. 'காடுறையும்வாழ்க்கையையுடையகொலைத்தொழி லையுடையமக்களை' என்றது நாடாகாதகாட்டிடத்தை யிருப்பிடமாகக் கொண்டு விலங்கினங்களைக்கொன்றுதின்றுயிர்வாழும் விலங்குபோலும்

புல்லியமக்களையென்றவாறு. 'நாட்டின்கணுறையவொருவர்நல்கினும்' என்றது நன்மக்கள்வாழுநாட்டின்கண் அவரோடொருநிகராய்வாழும் படி பொருகாருணிகன் விடும்விளைநிலங்களுமளித்து வேண்டுமுதவி புரிந்துவரினு மென்றவாறு. 'கொலைத்தொழின்முதலானவற்றைத் தவிர்ந்தநன்றாகவொழுகமாட்டார்' என்றதுஅவர்கொலையுங்கொள்ளையு மாகிய புன்றொழில்களைத்தவிர்ந்து நல்லொழுக்கமுடையராயிருந்து வாழமாட்டாரென்றவாறு. இது பொருள்; இனிவருவதுவமம். 'நாடோறுங்கையுளேமருவிவளரினும்' என்றது காட்டிடையே வாழுங் காடையைப்பிடித்தொருகூட்டின்கண்வைத்துக் கையிற்கொண்டொரு வனதற்கு நல்லுணவளித்துவளர்த்துவந்தாலும் என்றவாறு. 'குறும் பூழ்க்குச்செய்யின்கண்ணே யுறையவேண்டுமனமேயுள்ளது' என்றது அதற்குப் புன்செய்க்காடுகளிற்சென்று புழுவும் புன்மணியும் பொறுக் கித்தின்றுயிர்வாழவிரும்புமனமேயுளதாகும் என்றவாறு. அதுபோல அவர்நன்றாகவொழுகமாட்டார் எனக்கூட்டிமுடித்துக்கொள்க. ஆதலா லவர்க்கு நன்மைபுரிதலாற்பயனில்லையென்பது குறிப்பாயிற்று. கூட் டில்வைத்துவளர்த்தாலுங் காடைகாட்டிலோடிவிடும் என்பது இதன் பழமொழி. இது இங்குச்செம்பொருளொன்றேயுணர்த்தித் திட்டாந்த மாய்நின்றது. "கலக்கம்புதின்றாலுங்காடைகாட்டிலே" எனவும் ஒரு பழமொழி வழங்குவதுண்டு.

122. விலங்கேயுந் தம்மோ டுடனுறைதன் மேவுங்
கலந்தாரைக் கைவிடுத லொல்லா—விலங்கருவி
தாஅ யிழியு மலைநாட வின்னாதே
பேஎயொ டானும் பிரிவு.

எ-று, விலங்காயினுந்தம்மோடுடனுறைதன்மேவுங் கலந்தாரைக்கைவிடுதன் மாட்டாவாதலா விலங்காநின்றவருவிகள் பாய்ந்திழியாநின்ற மலைநாடனே பேயோடாயினுந்தான்கலந்தபின்பு பிரிவின்னாதென்றவாறு.

(குறிப்பு) இது, நட்டாரைவிலக்கலாகாதென்கிறது. 'விலங்கேயு' மென்றது விதிவழியொழுகாது தம்மனம்போனவழியேயொழுகுமியல் புடைய திரியக்குவகைகளுமேன்றபடி. இதனால் விதிவழியொழுகு வார்க்குக் கலந்தாரைக்கைவிடுதலொல்லாதென்பது சொல்லவேண்டா தாயிற்று. 'தம்மோடுடனுறைதன்மேவுங்கலந்தாரைக் கைவிடுதன் மாட்டா' வென்றது தம்மோடு சகவாசம்பொருந்தியவராய் மனங்கலந்த நட்புடையாருளராயின் அவரைவிட்டுவிலகமாட்டா வென்றவாறு.

'பேயொடாயினுந்தான்கலந்தபின்புபிரிவின்னு' என்றது பேய்போலு மறிவிலராயிருப்பினும் அவர்மனங்கலந்தநட்புடையராயின் அவரை விட்டுநீங்குதல் துன்பத்தைப்பயக்குமென்றவாறு. இதனுல் கலந்தார் அறிவுடையோராயிருப்பின் அவரைப்பிரிதல் மிக்கதுன்பம்பயக்கு மென்பது சொல்லவேண்டாதாயிற்று. ஆதலாலவரைப்பிரிதலாகா தென்பதுகருத்து. 'ஆண்டீண்டெனவொன்றோ' வென்னும்பாட்டுக்கு நட்புடையோர்மாட்சியிலராயினு மவரைவிலக்கலாகாதென்பதும்; இப் பாட்டிற்கு அவரைத் தாம்விலகலாகாதென்பதுமாகிய பொருள்வேறு பாடுடைமையா லிதுகூறியதுகூறலன்றாயிற்று. இப்பாட்டினுட் பொருளுமுவமமுமென்னுமிரண்டும் இரண்டு பழமொழிபற்றிநின்றன. அவற்றுட் பொருள்பற்றிநின்ற பழமொழி "விலங்கிற்கும்விள்ள லரிது"* எனவும், "பரீஇயுயிர்செகுக்கும் பாம்பொடுமின்னு, மரீஇப் பின்னைப்பிரிவு" எனவும் நாலடியுள்வழங்கப்பட்டது. உவமம்பற்றிநிற் பது, "பிரிவுசெய்தாலரிதேகொள்க பேயொடுமென்னும்பெற்றி"† எனத் திருக்கோவையாருள்ளும்‡ பேயோடுபழகுறினும் பிரிவதரிதரி தென்று எனக் §குசேலோபாக்கியானத்துள்ளும் வழங்கப்பட்டது.

123. கருவினுட் கொண்டு கலந்தாருந் தம்மு
ளொருவழிநீடு முறைதலோ துன்பம்
பொருகடற் றண்சேர்ப்ப பூந்தா மரைமேற்
திருவொடு மின்னுது துச்சு.

எ-து தாய்வயிற்றினுட் கருவினுட்டங்கியபொழுதே தொடங்கிக் கலந்த வர்களு மோரிடத்தே தம்முணெடுநாளுறைந்தா லவ்வுறைவு தமக்குத் துன்ப மாம். பொருகடற்றண்சேர்ப்பனே பூந்தாமரைமேல்வாழுந் திருவோடாயினுங் கூட நெடுநாட்சேர்ந்துறைத லின்னுதாதலானென்றவாறு.

(குறிப்பு) இது, ஒதுக்குக்குடிவாழ்க்கை துன்பம்பயக்குமென் கிறது. 'தாய்வயிற்றினுட் கருவினுட்டொடங்கியபொழுதே தொடங் கிக் கலந்தவர்களு' மென்றது அங்ஙனங் கலவாதவருறைவு மிக்க

---

* நாலடியார் 8-ம் அதிகாரம் பொறையுடைமை செய். 6.

† நாலடியார் 22-ம் அதிகாரம் நட்பிற்பிழைபொறுத்தல் செய். 10.

‡ திருக்கோவையார் செய். 144.

§ குசேலோபாக்கியானம் - குசேலர் தன்னகர்ப்புறமடைந்த வத்தியாயம் செய். 224.

துன்பத்திற்கிடமாயிருக்கு மென்பது சொல்லாமையே பெறற்பொருட் டாய்நின்றது. ஓரிடம்-ஒருவீடு. 'உறைந்தால்' என்றது உறையாமை பெரும்பான்மையென்பதுபட உறைதற்றுன்பம் உலகப்பிரஸித்த மென்பதனை விளக்கியவாறுமிற்று. 'அவ்வுறைவு தமக்குத் துன்பமா' மென்றது அவ்வுறைவு தாமடையுந்துன்பத்திற்குத் தப்பாதகாரணமா மென்பதுதோன்றக் காரணத்தைக் காரியமாக்கிக் கூறியபடி. மேல் உறைதல் இன்னுதென்பதற்கு மிஃதொக்கும். 'பூந்தாமரைமேல்வாழுந் திருவோடாயினும்' என்றது செல்வத்துக்கெல்லாம் அதிதெய்வமா யுபாசித்தார்க்கு வேண்டியசெல்வமளிக்கவல்ல திருமகள்போல எல்லாச் செல்வத்தினு முரிமையுடைய பெருஞ்செல்வராயிருப்பினு மென்ற வாறு. இதனுல் மிக்கசெல்வமில்லாதாரோடும் வறியாரோடும் உட னுறைதல் மிக்க துன்பம்பயக்குமென்பது சொல்லவேண்டாதாயிற்று. துச்சு - ஒருவீட்டிற்சேர்ந்துறையு மொதுக்குக்குடி. இப்பாட்டின் கருத்து "புக்கிலமைந்தின் றுகொல்லோவுடம்பினுட், டுச்சிலிருந்த வுயிர்க்கு"* எனத் திருக்குறளுள்ளுமுள்ளது. இதன்பழமொழி எலிச் சேலவானுலும் தனிச்சேலவு என்பதாம். இதன்பொருள் மாடகூடங்க ளாற் சிறந்ததொரு பெரியவீட்டின்கண் பிறருடன்கூடி ஒதுக்குக்குடி யிருந்துவாழ்வதைவிட எலிச்செலவுபோலும் சிறிதிடமுடையதா யொடுங்கியவீடாயிருப்பினும் அதிற் றனியேகுடியிருந்துவாழ்தல் சிறந்ததென்பதாம்.

124 தங்குற்ற நீக்கல ராகிப் பிறர்குற்ற
மெங்கெங்குந் தீர்த்தற் கிடைபுகுத—லெங்கும்
வியனுலகில் வெள்ளாடு தன்வளி தீரா
தயல்வளி தீர்த்து விடல்.

எ-து தாஞ்செய்யுங்குற்றத்தை நீக்காதே பிறர்செய்யுங்குற்றத்தைக் கற் பித்து நீக்குதற்குத் தாமெங்கெங்கு மிடைபுகுதல் பெரியவுலகின்கணெங்கும் வெள்ளாடு தன்வாதந்தீர்க்கமாட்டாது வேற்றுயிரின் வாதநோயைத்தீர்க்கு மதனேடொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இது, ஒருவர்தாம் திருந்தாதவராயிருந்துகொண்டே பிறரைத்திருத்தப்புகுவார் பரிஹஸிக்கப்படுவரென்கிறது. 'தாஞ்செய் யுங்குற்றத்தைநீக்காதே' என்றது தாம் மனம்போனபடியொழுகுங்

* திருக்குறள் ௩௪-ம் அதிகாரம், நிலையாமை செய்யுள்—10.

காமசாரமுடையராயிருந்துகொண்டே என்றபடி. ‘பிறர்செய்யுங்குற்றத்தைக் கற்பித்துநீக்குதற்கு’ என்றது பிறர் காமசாரமாய்ச்செய்யுங் குற்றங்களை, அவருக்குத் தர்மா நுஷ்டானத்தைக்கற்பித்துக்கொடுத்துப்போக்கும்பொருட் டென் றவாறு. ‘தாம் எங்கெங்குமிடைபுகுதல்’ என்றது தர்மசாஸ்திரோபந்யாசகராய்ப் பலதேசங்களிலுஞ்சென்று ஆங்காங்குள்ள தர்மசங்கங்களி லுபந்யாசஞ்செய்யப்புகுதல் என்றவாறு. ‘வெள்ளா’டென்றது வாதநோயுடையதொரு வெள்ளாடென்றபடி. ‘தன்வா தந்தீர்க்கமாட்டா’தென்றது தனக்குள்ளவாதநோயைத் தீர்த்துக்கொள்ளமாட்டாது அந்நோயால் முடப்பட்டகாலுடையதாய் நொண்டிநடந்துகொண்டென்றவாறு. ‘வேற்றுயிரின்வாதநோயைத் தீர்க்குமதனோடொக்கு’ மென்றது மக்கள் முதலிய பிறவுயிரின் வாத நோயைத்தீர்ப்பதற்கு மருந்தாக வது பாலுதவப்புகுந்தாற்போலும் நகைப்புக்கிடமாமென்றவாறு. வெள்ளாட்டின்பாலால் வாதமுதலிய நோய்தீருமென்பதை “வெள்ளாட்டுப்பாலுக்குமேவியநற்றீபனமாந், தள்ளாடுவாதபித்தஞ்சாந்தமாம்” * என்பதனுனறிக. இவ்வுவமையால் வெள்ளாட்டின்பால் வாதமுதலியநோய்க்கு மருந்தாயிருப்பினும் அப்பாலினையுதவும் வெள்ளாடே வாதநோயுடையதாயிருப்பின் அதனுல் அந்நோய் வளர்வதன்றிச் சிறிதும் தீராதென்று பலராலு மெள்ளப்படுமாறுபோல தர்மசாஸ்திரோபந்யாசம் காமசாரமுதலிய தீயொழுக்கங்களைப்போக்கவல்லதாயினும் அவ்வுபந்யாசஞ்செய்புமவர், அவ்வாறொழுகாதகுற்றமுடையராயின் அதனுற் றீயொழுக்கமுண்டாவதன்றி நல்லொழுக்கமுண்டாகாதென்று பலராலுமெள்ளப்படுவர் என்னும் பொருள்தோன்றுதலாற் குற்றமுடையார்கூறுமுபதேசங் கொள்ளற்பாற்றன்று என்பது குறிப்பாயிற்று. இதன் பழமொழிவடிவம் வந்தவழிக்கண்டுகொள்க.

125. உரைசான்ற சான்றோ ரொடுங்கி யுறைய
நிரையுளா ரல்லார் நிமிர்ந்து பெருகல்
வரைதா ழிலங்கருவி வெற்ப வதுவே
சுரைதாழ வம்மி மிதப்பு.

எ-து, புகழமைந்தசான்றோர் விளங்காதொடுங்கியுறையத் தூயகுடிமரபினுளரல்லாத கீழோர் செல்வத்தாலோங்கிப் பெருகுதல் வரைதாழிலங்கருவி வெற்பனே யஃதன்றே சுரையாழ வம்மி மிதந்ததனோடொப்பதென்றவாறு.

---

* பதார்த்தகுணசிந்தாமணி செய்யுள்—102.

(குறிப்பு) இது, உயர்ந்தோர்தாழ்தலும், இழிந்தோருயர்தலும் இயல்பன்றென்கிறது. 'விளங்கர்தொடுங்கியுறைய' என்றது செல்வத் தால்விளங்காது கீழோர்க்கடங்கிவாழ என்றபடி. 'பெருகுதல்' என் றது பெருகுதலுளதாயின் என எச்சச்சொற்கூட்டி முடிக்கற்பாற்று. "சுரைதாழவம்மிமிதப்பு" என்பது பழமொழிக்கூற்று. 'சுரையாழ வம்மிமிதந்ததனோடொப்பது' என்றது மிதத்தற்குரியசுரை ஒருதெப் பத்திற்றாழாநிற்க, ஆழ்தற்குரியவம்மி யதன்மேல் மிதந்துசெல்வது போலும் விபரீதமாகுமென்றவாறு. சுரை - சுரைநெற்று அல்லது அதுபோலும் உள்வெளிமிக்குடைய ஊமைக்கலம். இதனுலுயர்வடை தற்குரியோர் தாழ்தலும் தாழ்வடைதற்குரியோருயர்தலும் உபாதி வயத்தானுதலால் அவ்வுபாதிநீங்கவே அவர் தத்தம் நிலையடைவரென் பது குறிப்பாயிற்று. ஆதலால் உயர்வடைதற்குரியோர் தாழ்தலிகழப் படாதென்பதும், தாழ்வடைதற்குரியோ ருயர்வு மதிக்கப்படாதென்ப தும் குறிப்பாற்றோன்றியகுறிப்பு. இப்பழமொழி, அம்மிமிதக்கவிடும் விம்மிதத்தொழின் முறைபற்றிப்பிறந்ததுபோலும். இதனை "சுரை யாழவம்மிமிதப்ப"* எனவும், "அம்மிமிதந்தாழ்ந்துசுரைவீழ்ந்தது"† எனவும் பிறரும் எடுத்தாளுவாராயினர். 'சுரையாழவம்மிமிதப்ப' வென்பதனை இலக்கணநூலுரைகளிலெல்லாம் சுண்ணமொழிமாற்றுக் குதாரணங்காட்டியிருப்பதுஆராயத்தக்கது. இப்பழமொழிப்பொருளை யிக்காலத்தவர் குப்பையுயர்ந்தது கோபுரந்தாழ்ந்தது எனப் பிறிதோர் வாய்பாட்டான் வழங்குவர்.

126\. ஆற்றப் பெரியார் பகைவேண்டிக் கொள்ளற்க
போற்றாது கொண்டரக்கன் போரி னகப்பட்டா
னேற்ற பெருமை யுடையாருங் கூற்றம்
புறங்கொம்மை கொட்டினா ரில்.

எ-து, மிகவும்வலியாற்பெரியாரோடுசொன்னும் பகையை விரும்பிக் கொள்ளாதொழிக வறிவினுவாராய்ந்து பாதுகாவாது பண்டோரரக்கன்போரின் கண்ணேயகப்பட்டிறந்துபோயினுன் றவம்பண்ணினபெரியோருங் கூற்றத்தை முதுகினைக் கொம்மைகொட்டிப் பிழைத்தாரில்லை யாதலானென்றவாறு.

---

* தொல்காப்பியச்சொல்லதிகாரத்தின் 406-ம் சூத்திரவுரை மேற்கோள்.

† சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், செய்யுள்—8.

(குறிப்பு) இது, வலியான்மிக்காரை விரோதிக்கலாகாதென்கிறது. "வலியார்க்குமாறேற்றலோம்புக"* என்றார் பிறரும். 'மிகவும்வலியாற் பெரியாரோடு'என்றது விரோதித்தவிடத்துத் தம்மைவெல்லவுங்கொல்லவும்வல்லவலியாரோடு என்றவாறு. 'கொள்ளும்பகையை' என்றது காலதேசங்கள் அநுகூலமாய்வாய்த்தவிடத்துக் கொள்ளுதற்குரியதாயிருப்பினுமப்பகையையும் என்றவாறு. சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. 'விரும்பிக்கொள்ளாதொழிக' என்றது விரும்பாதொழிக என்றபடி. இதனாற் காலதேசங்கள் அநுகூலமாய்வாயாதவிடத்தும், அவை பிரதிகூலமாகியவிடத்தும் அவரோடு பகைகொள்ளலாகாதென்பது சொல்லவேண்டாதாயிற்று. 'அறிவினாலாராய்ந்து பாதுகாவாது பண்டோரரக்கன்போரின்கண்ணேயகப்பட் டிறந்துபோயினான்' என்றது எடுத்துக்கொண்டபொருளை நாட்டுதற்கேற்றதோ ரிதிகாசங் காட்டியவாறு. இது திட்டாந்தம். இதனுட் பண்டோரரக்கனென்றது இராவணனை. 'அறிவினாலாராய்ந்துபாதுகாவா' தென்றது தன்னை வென்ற கார்த்தவீரியனைக்கொன்ற பரசுராமனைவென்ற வலிமிகுதியையும், தன்னைவென்ற வாலியைக்கொன்றவலிமிகுதியையுங்கண்டு தன்னை வெல்லவுங் கொல்லவும் வேண்டின் அதுசெய்யும்வலியான்மிக்கோனென்று துணிந்து இராமபிரானைப் பகையாதொழிந்துய்யாதே, பகைத்து என்றபடி. பின்னடியிரண்டும் பழமொழிக்கூற்று. இது, இங்குப் பிரமாணவாக்கியமாய் ஏதுவாயிற்று. 'தவம்பண்ணினபெரியோரும்' என்றது ஒன்னார்த்தெறலு முவந்தாரையாக்கலுஞ் செய்யவல்ல ஆற்றலான்மிக்க முனிவருமென்றபடி. இதனால் ஏனையோர் பிழையாமை சொல்லவேண்டாதாயிற்று. 'கூற்றத்தை' என்றது எதிர்ப்படாதாரையுந் தேடியெதிர்ந்து தப்பாதுகொல்லவல்ல கூற்றுவனை என்றவாறு. "முதுகினைக்கொம்மைகொட்டி" என்றிருப்பது முதுகிடைக்கொம்மைகொட்டி என்றிருக்கவேண்டும். 'முதுகிடைக் கொம்மைகொட்டிப்பிழைத்தாரில்லை'என்றது அவமதித்துப்பிழைத்தாரில்லை யென்றபடி. அவமதித்துப்பிழைத்தாரில்லையென்றதனால் விரோதித்துப்பிழைத்தாரில்லை யென்பது சொல்லவேண்டாதாயிற்று. முதுகிடைக்கொம்மைகொட்டலாவது, பராமுகமாய் முன்செல்லுமவனை, முதுகின்புறமுள்ளா னெதிர்முகமாம்படி யங்கைகொட்டியழைத்த

* திருக்குறள் அஎ-ம் அதிகாரம் பகைமாட்சி செய். 1.

லாகிய அவமதிப்புக்குறிப்பாம். இப்பழமொழி, வலியான்மிக்காரை யவமதித்தெதிர்க்கலாகாதென்னுங் குறிப்புணாநின்றது. இதனை, "கூற்றத்தைக்கொம்மைகொட்டிக்குலத்தொடுமுடியுமென்பார்"* எனவும், "தீவினையினைக் கொம்மைகொட்டினன்"† எனவும் பிறரும் எடுத்தாளுவாராயினர். "கூற்றத்தைக்கையால்விளித்தற்றலாற்றுவார்க், காற்றாதாரின்னாசெயல்." ‡ என்பதுமிது. (இக்குறளுரையில் கைகாட்டியழைத்தாலொக்கும் என்றிருப்பது கைகொட்டியழைத்தாலொக்கும் என்றிருக்கவேண்டும்.) இப்பழமொழிவடிவம் வந்தவழிக் கண்டுகொள்க.

127. ஆகுஞ் சமயத்தார்க் காள்வினையும் வேண்டாவாம்
போகும் பொறியார் புரிவும் பயமின்றே
யேகன் மலைநாட வென்செய்தாங் கென்பெறினு
மாகாதார்க் காகுவ தில்.

எ-து, செல்வமாகக்கடவகாலத்தைவந்தெய்தினார்க்கு முயன்று வருந்தவும் வேண்டா; செல்வம்போகக்கடவவினையையுடையார் முயன்றுபுரிந்தாலுமவர்க்குப் பயனில்லை. பிறங்கியகற்களையுடைய மலைநாடனே; யெல்லாமுயற்சியுஞ்செய்தெல்லாச்செல்வமும் பெற்றாராயினு மாகக்கடவரல்லாதார்க்கு நன்றாகுவதில்லையாகலா னென்றவாறு.

(குறிப்பு) இது, தொகுக்கும்ஊழ்வேறு, துய்க்கும்ஊழ்வேறு என ஊழின்வேறுபாடுகூறுகிறது. இதனைப் பிறிதோராற்றால் "இருவேறுலகத்தியற்கை"§ என்றார்பிறரும். 'செல்வமாகக்கடவகாலத்தை வந்தெய்தினார்க்கு' என்றது தமக்குச் செல்வமுண்டாதற்கேதுவாகிய சுகிருத பரிபாகமுடையகாலத்தையடைந்தார் அச்செல்வமடையும் பொருட்டு என்றவாறு. பின், போகும்பொறியாரெனவருதலால் இங்கு ஆகுஞ்சமயமென்றது ஆகூழ் பரிபாகமடையுங்காலமாயிற்று. ஆகூழுடையாராயிருப்பினும் அது பரிபாகமடையாவிடிற் செல்வமுண்டாக மாட்டாதென்பதுணர்த்தற்கு ஆகும்பொறியுடையார்க்கென எளிதிற் கூறாது, ஆகுஞ்சமயத்தார்க்கென்றார். இதனால், பின்போகும்பொறி

---

* சீவகசிந்தாமணி, 4-வது குணமாலையாரிலம்பகம் செய்யுள்—259.

† தணிகைப்புராணம், வீராட்டகாசப்படலம், செய்யுள்—26.

‡ திருக்குறள் 90-ம் அதிகாரம் (பெரியாரைப்பிழையாமை) செய்யுள் 4 உரை.

§ திருக்குறள் 38-ம் அதிகாரம் ஊழ் செய்யுள் 4.

யென்பதற்குப் போகூழின் பரிபாகமென்பது கருத்தாகக்கொள்க. காலம் யாத்திரைக்கிடமானமையால், ஊரையெய்தினர் என்புழிப் போலக் காலத்தையெய்தினர்க்கு என்றார். 'முயன்றுவருந்தவும் வேண்டா' என்றது ஆகூழுடையரல்லாதார் செல்வமடைதற்கு முயன்று வருந்துதல்போல் வருந்தவேண்டா என்றவாறு. அவர் முயலாதிருக்கவே செல்வந் தானேசென்றெய்தும் என்பது கருத்து. முயன்றவழியும் செல்வம் எளிதினெய்துவர் என்பது குறிப்பு. 'செல்வம்போகக்கடவவினையையுடையார்' என்றது செல்வமிழத்தற்கு ஏதுவாகிய தீவினையின்பரிபாகமுடையார் என்றவாறு. 'முயன்றுபுரிந்தாலு மவர்க்குப்பயனில்லை' என்றது செல்வமெய்தற்குரிய முயற்சியைக் குறைவற வருந்திச்செய்தாலும் அம்முயற்சி பயன்படுவதில்லை என்றவாறு. இங்ஙனங்கூறிய முன்னடிஇரண்டும் முறையே "கழுமலத்தி யாத்த"* "எவ்வந்துணையா"† என்னுஞ்செய்யுள்களான் ஆக்கத்திற்கு அநுகூலமாகவும், பிரதிகூலமாகவும் சொல்லப்பட்டுள்ள ஆகூழ், போகூழ்களின் அநுவாதமாய்த் துய்க்குமூழின் வேறுபாடுணர்த்தற் குத்துணையாய்நின்றன. 'எல்லாமுயற்சியுஞ்செய் தெல்லாச்செல்வமும் பெற்றாராயினும், என்றது ஒருவர் என்னமுயற்சிசெய்து என்ன செல்வத்தைப்பெற்றிருந்தாலும் என்றபடி. இதனுள் முயற்சியின்றி யாகூழாற்பெற்ற செல்வமுமடங்கும். இங்கு வினச்சொற்கள் முயற்சி செல்வங்களின்குறைவின்மை குறித்துநின்றன. 'ஆகக்கடவரல்லாதார்க்கு' என்றது நல்லனுபவமுடையராதற்குத் தடையாயுள்ள தீயூழின் பரிபாகமுடையார்க்கு என்றவாறு. 'நன்றாகுவதில்லை' என்றது அச்செல்வத்தால் நல்லனுபவமுண்டாவதில்லை என்றவாறு. எனவே ஒருமுயற்சியுஞ்செய்யா தொருசெல்வத்தையுமடையாதவராயிருப்பினும் நல்லனுபவமுடையராதற்கேதுவாகிய ஆகூழின் பரிபாகமுடையார்க்கு நல்லனுபவமுண்டாகாதிராதென்பது குறிப்பாயிற்று. இக் குறிப்பாற்போந்தபொருளுக்கு, "ஆகுஞ்சமயத்தார்க் காள்வினையும் வேண்டா" என்பதும், "ஆகாதார்க்காகுவதில்" என்னுங் கூற்றாற் போந்தபொருட்கு, "போகும்பொறியார் புரிவும்பயமின்று" என்பதும் திட்டாந்தமாயின. 'ஆதலான்' என்றது நல்லனுபவமுண்டாதற்

* பழமொழி செய்யுள் 62.

† பழமொழி செய்யுள் 63.

கேதுவாகிய நிறைசெல்வமுடையாருள்ளும் ஒருசிலர்க் கவ்வனுபவம் கிகழ்ச்சாணுமையாலும், அச்செல்வமில்லாதாருள்ளும் ஒருசிலர்க் கவ்வனுபவம் நிகழக்காண்டலாலும் என்றவாறு. இவ்வெச்சச்சொல் (ஆக்கத்துக்குரியவூழினும் அனுபவத்துக்குரியவூழ்வேறுகும்) என அவாய்நிலைச்சொற்கூட்டி முடிக்கற்பாற்று. "ஆகாதார்க்காகுவதில்" என்பது பழமொழிக்கூற்று. அது இங்கு ஊழ்வகையின்வேறுபாடான எடுத்துக்கொண்டபொருள் துணிதற்கேதுவாயிற்று.

128. காட்டிக் கருமங் கயவர்மேல் வைத்தவ
ராக்குவ ராற்ற வெமக்கென் றமர்ந்திருத்தன்
மாப்புரை நோக்கின் மயிலன்னுய் பூசையைக்
காப்பிடுதல் புன்மீன் றலை.

எ-து, தங்கருமத்தைக் கீழ்மக்கண்மாட்டேகாட்டிக்கொடுத்து, மற்றவர் தங்கருமத்தையாக்குவரென்று நினைத்து மேவியிருத்தல், மான்விழியையொவ்வா நின்றநோக்கினையுடைய மயிலன்னுய்; பூசையை, புன்மீனுணங்குகின்றவிடத்தைக் காக்கவைத்ததனேடொக்குமென்றவாறு.

(குறிப்பு) இது, பொருட்பாதுகாப்பினைக் கயவரைநம்பி அவர் மாட்டுவிட்டிருக்கலாகாதென்கிறது. 'தங்கருமத்தை' என்றது தம் பொருளைப் பாதுகாக்குங் கருமத்தை என்றவாறு. இங்குப் பாதுகாப்பு உவமையாற்பெறப்பட்டது. 'கீழ்மக்கண்மாட்டே' என்றது களவுதொழிலுடைய கீழ்மக்களிடத்தே என்றவாறு. 'காட்டிக்கொடுத்து' என்றது இவையிவை பாதுகாக்கவேண்டும் பொருளென்று அவர் தெரிந்துகொள்ளும்படி காட்டிவைத்து என்றவாறு. காட்டல் அக்கள்வர்க்கநுகூலமாய்ப் பொருளுடையார்க்குப் பிரதிகூலமாமென்பது குறிப்பு. 'மற்று' என்றது காட்டிக்கொடுத்ததுமன்றி வாளாவிருத்தலுந் தவறென்னுங் குறிப்புணரநின்றது. அவர் தங்கருமத்தையாக்குவரென்று நினைத்து' என்றது காக்குங்கயவர் தமக்குரியராதலாலும் பிறகள்வர்க்குப்பகையாதலாலும் அக்கள்வர்வந்து தம்பொருளைக் கவர்ந்துகொள்ளவிடாது கடைபோகக் காப்பரெனமயங்கி என்றவாறு. 'மேவியிருத்தல்' என்றது அவர் பாதுகாப்பைவிரும்பித் தாம் வாளாவிருத்தல் என்றவாறு. 'பூசையைப்புன்மீனுணங்குகின்றவிடத்தைக் காக்கவைத்ததனேடொக்கும்' என்றது ஒருவர் தாமுணக்கும் மீனுணங்கலை எலி கோழிமுதலிய கவர்ந்துசெல்லாது பாதுகாக்க

வேண்டி அவற்றின் பகையாகத் தாம்வளர்க்கும் பூனையைக் காவலாக வைப்பதுபோலும் என்றவாறு. மீனுணங்குமிடத்திற் பூனையைக் காவல்வைக்க அப்பூனையே அவ்வுணங்கலைக்கவர்ந்துண்ணுமாறுபோல, பொருளுள்ளவிடத்துக் கயவரைக்காவல்வைப்பின் அக்கயவரே அப்பொருளைக் கவர்ந்துண்டழிப்பராதலா லவரைப் பொருட்பாதுகாப்பில் வைக்கலாகாதென்பது கருத்தாகக்கொள்க. இதன்பழமொழி மீனையுணக்கப் பூனையைக்காவல்வைத்ததுபோலும் என வழங்கப்படும்.

129. தொன்மையின் மாண்ட துணிவொன்று மில்லாதார்
நன்மையின் மாண்ட பொருள்பெறுத—லின்னொலிநீர்
கன்மே லிலங்கு மலைநாட மாக்காய்த்துத்
தன்மேற் குணில்கொள்ளு மாறு.

எ-து, பழையநூல்களின் மாட்சிமைப்பட்ட துணிவினையில்லாதார் நன்மையான் மாட்சிமைப்பட்ட செல்வத்தைப்பெறுத லினியவொலியையுடைய வருவி நீர் கற்பாறைமேல்வந்திழியாநின்ற மலைநாடனே மா மிகக் காய்த்துத் தன்மேற் பிறரெறியுங்கல்லை யேற்றுக்கொள்ளுமாறுபோலுமென்றவாறு.

(குறிப்பு) இது, பொருள்படைத்தார்க்கு அதனைப்பாதுகாத்துத் துய்த்துவழங்குந்திறப்பாடுவேண்டுமென்கிறது. 'பழைய நூல்களின் மாட்சிமைப்பட்ட துணிவினையில்லாதார்'என்றது தொன்றுதொட்டே யனுபவமுடையாராலறுதியிடப்பட்ட பொருட்பாலாகிய நூல்களிற் சொல்லிய காத்தலுந்துய்த்தலும் வழங்கலுமாகிய செயல்களிற் றெளிவுடையராகாதார் என்றவாறு. 'நன்மையான்மாட்சிமைப்பட்டசெல்வத்தைப்பெறுதல்'என்றது தம்சூழ்ச்சியாற் செல்வமுடையராதலரிது; ஒருவாறு முன்னைய நல்வினையாற் சிறந்த செல்வத்தைப்பெறுவராயின் அப்பேறு என்றவாறு. 'மாமிகக்காய்த்துத் தன்மேற் பிறரெறியுங் கல்லை யேற்றுக்கொள்ளுமாறுபோலும்' என்றது மாமரமானது மிக்க காயுடையதாயின் அதனைப்பாதுகாத்துவழங்குந் திறப்பாடின்மையாற் பிறரெறியுங் கல்லெறியும்பெற்றுக் காயினையுமிழந்து துன்புறுமாறு போலப் பிறரால‌லைப்புண்டு பொருளையுமிழந்து துன்புறுதற்கேதுவாம் என்றவாறு. ஆதலாற் பொருள்படைத்தார் தொன்மையின் மாண்ட துணிவுடையராதல்வேண்டுமென்பது குறிப்பு. "காய்த்தமாக்கல்லேறி வாங்கும்" என்பது இதன்பழமொழி. இதனை எதிர்மறைமுகத்தாற் "காயாதமாமீதுகல்லேறுசெல்லுமோ"* எனப் பிறருமெடுத்தாளுவாராயினர்.

*தாயுமானவர்பாடல், சச்சிதானந்தசிவம். செய்யுள் 8.

130. நெடியது காண்கிலாய் நீயளியை நெஞ்சே
கொடியது கூறினாய் மன்ற—வடியுளே
முற்பகற் கண்டான் பிறன்கேடு தன்கேடு
பிற்பகற் கண்டு விடும்.

எ-து, பின்பு நெடுங்காலத்தின் மிக்குவருந்துன்பத்தையறியமாட்டாயாய்ப் பிறரைக்கேடுசூழ்துமென்று நமக்குக் கொடியதனைக் கூறினாய்காணெஞ்சே யொன்றுமறியாய் பிறனொருவன்கெடுங்கேட்டை முன்பொழுது கண்டவ னந்நிலையுளே தான்கெடுங்கேட்டினைப் பின்பொழுது காணுமென்றவாறு.

(குறிப்பு) இது, ஒருவர் தமக்கு ஆக்கம்வேண்டிப் பிறர்க்குக்கேடு சூழலாகாதென்கிறது. இப்பாட்டு, வாஸனைவயத்தாற் றீநெறிக்கட் செல்லவிரும்புமனத்தை நோக்கி அதனையடக்கக்கருதிய இயமநெறி பயில்வான் கூற்றினுள் வைத்துக்காட்டப்பட்டது. 'பின்பு நெடுங் காலத்தின் மிக்குவருந்துன்பத்தை யறியமாட்டாயாய்' என்றது ஒரு வர் ஒருவர்க்கு ஒரு கேடுசூழ்ந்தால் அத்தீவினையானது காலாந்தரத் தில் பிறக்கும் பல பிறப்புக்களிலும் சூழ்ந்தாரைத் தொடர்ந்துசென்று அவர்க்குச் சூழப்பட்டாரெய்திய துன்பத்தினும் பன்மடங்கு மிக்க துன்பம்பயக்கும் என்பதையறியும் ஆற்றலில்லாமையால் என்றவாறு. இது நெஞ்சம்கொடியதுகூறுதற்கேதுவாயிற்று. 'பிறரைக்கேடுசூழ்தும் என்று' என்றது நமக்கு ஆக்கமடையவேண்டிப் பிறர்க்குக்கேடுசூழ்வோ மென்றெண்ணி என்றவாறு. 'நமக்குக் கொடியதனைக் கூறினாய்' என்றது நமக்குக் கேடுபயக்குங்காரியத்தில் முயலவழைக்கின்றாய் என்றவாறு. 'காண்' என்றது மன்றவென்றதன்பொருளாகத் தன்றெளிவுடைமை தோன்றக் கூறியவாறு. ஆதலால் நீ அளியையென்க. அறிவில்லா மற் சொல்லினமையால் நிக்கிரகத்துக்குவிஷயமாகாது அநுக்கிரகத் துக்கு விஷயமாயினை யென்பதுகருத்து. ("அளியை") 'ஒன்றுமறி யாய்' என்றது நமக்கு நன்மை பயக்குஞ் செயலிவை; தீமைபயக்குஞ் செயலிவை யென்பது சிறிதுமறியாய் என்றபடி. ஆதலால் நான் சொல்வதே கேட்டுநடக்கக் கடவையென்பது குறிப்பு. பின்னடியிரண் டும்பழமொழிக்கூற்று. 'பிறனொருவன் கெடுங்கேட்டை முன்பொழுது கண்டவன்' என்றது பிறனொருவன் கெடுதற்கேதுவாகிய தீவினையை முற்கணத்திற் செய்தவன் என்றவாறு. 'அந்நிலையுளே தான் கெடுங் கேட்டினைப் பின்பொழுதுகாணும்' என்றது. தடையூழில்லையாயின்,

கேடுசெய்வான் செய்யுந்தீவினை முற்றுப்பெறுமுன்னமே அவன் கெடுதற்கேதுவாகிய தீவினையைப் பிற்சணத்திலனுபவித்தறிவான் என்றவாறு. மூலத்துள்ளும் உரையுள்ளும் பகல், பொழுது என்பன "ஒருபொழுதும் வாழ்வதறியார்"* என்புழிப்போலக் கணப்பொருட்டாய் நின்றன. இதனால் வினைப்பயன், தடையூழுளதாயின் அதுதீர்ந்த காலாந்தரத்தி லனுபவிக்கப்படுமென்பதும், தடையூழில்லையாயின் உடனே யனுபவிக்கப்படுமென்பதும் பெறப்பட்டன. தீவினைப் பயனைக் காலாந்தரத்திலனுபவித்தலை "அக்கேபோலங்கையொழிய"†என்பதனாலும் உடனனுபவித்தலை "விஷவ்ருக்ஷோபிஸம்வர்த்ய ஸ்வயம்சேத்து மஸாம்ப்ரதம்" என்பதனாலும் அறிக. இதன்பழமொழி முற்பகல்செய்யிற்பிற்பகல்விளையும் என்பதாம். இது "பிறர்க்கின்னா முற்பகற்செய்யிற் றமக்கின்னா, பிற்பகற்றாமேவரும்"§ எனத்திருக்குறளுள்ளும், "முற்பகற்செய்தான் பிறன்கேடு தன்கேடு பிற்பகற்காண்குறூஉம் பெற்றிகாண்"¶ எனச் சிலப்பதிகாரத்துள்ளும் எடுத்தாளப்பட்டது. முற்பகல், பிற்பகல் என்பன இங்கு முறையே ஒரு கணத்தின் முற்பாகமும் பிற்பாகமுமாம். பகல்-கணம். முற்பகலும் பிற்பகலும் முன்பின்னாகத்தொக்க ஆறும்வேற்றுமைத்தொகை.

131. செம்மாந்து செல்லுஞ் செறுநரை யட்டவர்
தம்மேற் புகழ்பிறர் பாராட்டத்—தம்மேற்றும்
வீரஞ்சொல் லாமையே வீழ்க களிப்பினுஞ்
சோரப் பொதியாத வாறு.

எ-து, செம்மாந்து செருக்குடையராயொழுகும் பகைவரை வென்றுகொன்றவர் தாங்கடம்மேலுள்ளபுகழைப் பிறர் பாராட்டத் தம்மாட்டுள்ள வீரத்தைத் தாஞ்சொல்லாதொழிக. கள்ளுண்டு மிகக்களித்தாராயினுந் தம்பொருளைச் சோரப்பொதியாதவாறுபோலுமது வென்றவாறு.

---

* திருக்குறள் ௯௪-ம் அதிகாரம் செய். 7.

† நாலடி ௧௯-ம் அதிகாரம் செய். ௯.

§ திருக்குறள் ௯௨-ம் அதிகாரம் செய். 9.

¶ சிலப்பதிகாரம் 21-வது வஞ்சினமாலை 3, 4 அடிகள்.

(குறிப்பு) இது ஒருவர் தம் வெற்றியைத் தாமே சொல்லலாகா தென்கிறது. 'செம்மாந்து செருக்குடையராயொழுகும் பகைவரை வென்றுகொன்றவர்' என்றது வணக்கமின்றி யிறுமாப்புடையராய்க் கருவங்கொண்டு தம்மையவமதித்தொழுகும் பகைவரைவென்று கொன்றவராயிருப்பினு மென்றவாறு. சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. இதனாற் சிறவாதார் தம் பெருமைபேசுதல் கூடாதென்பது சொல்லவேண்டாதாயிற்று. 'தம்மேலுள்ளபுகழைப் பிறர்பாராட்ட' என்றது தாமப்பகைவரையட்ட புகழைப்பிறரறிந்து பாராட்டவேண்டி என்றவாறு. 'தம்மாட்டுள்ளவீரத்தைத் தாஞ்சொல்லாதொழிக' என்றது தாம் அப்பகைவரைவென்ற வீரப்பிரதாபத்தைத் தம் வாயாலே சொல்லலாகாதென்றவாறு. இங்குக் கூரம்பாயினும் வீரியம்பேசேல் என்னும் பழமொழிப்பொருளே பொருளாகக் கொள்ளப்பட்டது. 'கள்ளுண்டு மிகக்களித்தாராயினுந் தம்பொருளைச் சோரப்பொதியாதவாறு போலுமது, என்றது கள்ளுண்ட களிப்பாலறிவிழந்த நிலையிலும் கள்ளுண்டார் தங்கையிலுள்ளபொருளைச் சோரவிடாவண்ணம் இறுகப் பொதிந்து பாதுகாத்துக்கொள்ளுமாறுபோலும் என்றவாறு. செருநரையட்டாரும் கள்ளுண்டாரும் களிப்புமிகுதியால் ஒரு தன்மையுடையராயினும் கள்ளுண்டார் தங்கையகத்தாயபொருளை யிறுகப் பொதியாது சோரவிடுவராயின் அவரப்பொருளுமொழியவெளியராவதுபோலச் செறுநரையட்டாரும் தம் வீரப்பிரதாபத்தைநெஞ்சிலடக்காது வெளியிடுவராயின் அவர்க்குள்ளபுகழுமொழியவெளியராவராதலால் வீரஞ்சொல்லாமையே வேண்டும் என்பது கருத்து.

132. செய்த கருமஞ் சிறிதானுங் கைகூடா
மெய்யா வுணரவுந் தாம்படா—ரெய்த
நலத்தகத் தம்மைப் புகழ்தல் புலத்தகத்துப்
புள்ளரைக்கால் விற்பே மெனல்.

எ-று, தாஞ்செய்யத்தொடங்கியகருமங்கள் சிறிதாயினுந் தமக்குக் கைகூடுவதற்செய்யா வகைகூடாவாயினுமவை செய்துமுடிக்கவல்லரென்று பிறரான் மெய்யாகமதிக்கவும்படா ரித்தன்மையராயுள்ளார் நிரம்பாநன்மையிலே தகாத தாமே தம்மைப்புகழ்த நமக்ககப்படாதே புலத்தின்கணிருக்கின்ற பறவையை யரைக்காற்பொன்னுக்கு விற்பமென்று சொல்லுமதனோடொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இது, திறமையில்லாதார் தற்புகழிற் செவிகொடுக்க லாகாதென்கிறது. இங்கு, பிறர் என்றது சொல்லியகருமம் செய்து முடித்துக் கைவந்தவர் என்றவாறு. நன்மையாவது தொடங்கிய கருமத்தைச் சோர்வின்றி முடிக்கும் ஆற்றல்; அது இங்கு, புகழ்தற்கு விடயமானமையால் எழனுருபேற்றது. தகாத—ஆற்றலுள்ள வழியும் தாமே சொல்லத்தகாத. தம்மைப்புகழ்தல்—தாம் ஆற்றலுடையரெனப் பேசுதல். அரைக்காற்பொன்னுக்கு விற்பம் என்றது அரைக்காற்பொன் விலை கொடுத்தாற்போதும்; புலத்துப்புள்ளைப் பிடித்துக்கொடுப்போம் என்றபடி. கருதியகருமங் கைவந்துகாணுது, கைவந்தபிறரால் நன்மதிப்புமின்றிச் சிறியகூலிக்குப் பெரியகருமம் செய்துமுடிப்போமென்று சொல்லுமவர் தன்மதிப்பை நம்பி அவரை யொருகருமத்தில் வையற்க வென்பது கருத்து. இதனுல், ஒருகருமத்தில் வைக்கப்படுவோர் அக்கருமவகைகளைக் கடைபோகமுடித்துக் கைவந்தபயிற்சியுடையாராக வேனும், அவ்வாறு கைவந்தபயிற்சியுடையாரது உண்மையான நன்மதிப்புடையாராகவேனு மிருக்கவேண்டுமென்பது குறிப்பாயிற்று. "புலத்தகத்துப்புள்ளரைக்கால்விற்பேமேனல்" என்பது பழமொழிக்கூற்று.

133. பண்டின ரென்று தமரையுந் தம்மையுங்
கொண்ட வகையாற் குறைதீர நோக்கியக்கால்
விண்டவரோ டொன்றிப் புறனுரைப்பி னஃதாலவ்
வுண்டவிற் றீயிடு மாறு.

எ-து, பண்டு இவர் இழப்பெற்றியாரென்று தஞ் சுற்றத்தாரையுந் தம்மையு மனத்தின் மதித்துக்கொண்டவகைக்குத் தக்கபடியாற் றம் வறுமைதீரச் சிலரைச் சிலர் நோக்கினுனோக்கப்பட்டவர்களந்நோக்கினுருடைய பகைவருடனே யொன்றிப் புறங்கூறின் அதுவன்றோ தாமுண்டவில்லைத் தீயிடுமாறென்றவாறு.

(குறிப்பு) இது, செய்ந்நன்றி கோறலாகாதென்கின்றது. பண்டிவரிப்பெற்றியர் என்றது உட்கொள்ளுதற்குரிய முற்றொடர்பு முதலிய சாதனங்கூறியவாறு. இது இங்கு, கைமுதிகநியாயத்தால் பண்டினரென்ற தொடர்புகருதாதுசெய்யும் பேருதவியையு மகப்படுத்திநின்றது. சிலரை என்றது உட்கொள்ளப்பட்டாரை. சிலர் என்றது உட்கொண்டிருக்கும் கிழமையுடையோர். நோக்கினல் என்றது ஆதரித்துவந்தால் என்றவாறு. "பகைவருடனே ஒன்றிப் புறங்கூறின்" எனச் சொல்லின்

கொடுமைகூறவே அவருடன்கூடித் தீங்கிழைக்கும் செயலின்கொடுமை சொல்லவேண்டாதாயிற்று. "தாமுண்டவில்லைத் தீயிடுமாறு" என்றது தாம் நின்றுவளர்ந்த வீட்டில் தீவைத்ததுபோலும் ஒரு பெரிய தீவினையாகுமென்றபடி. இப்பழமொழி, செய்க்நன்றி சிநைப்போனை "உண்டவீட்டுக்கிரண்டு நினைப்போன்" என உலகவழக்கில் வழங்கப்படுகிறது. இதில் இரண்டு என்றது இரண்டாவது என்னும் பூரணப்பொருளுடைய தாய் நன்மை தீமையென்னு மிரண்டனுள் நன்மையின் மறுதலையாகிய தீமையை மறைத்துக்கூறுங் குறிப்புமொழியாய் "ஆன்முலையறுத்தவறனிலோர், பார்ப்பார்த்தப்பிய கொடுமையோர்" * என்பனபோலு முபசாரவழக்காயிற்று. இதன்றீமையின் கடுமையை வெளிப்படுத்துங்கருத்தால் உண்டவிற்றீயிடுமாறு எனச் சிறப்புவொப்பாட்டாற் பாட்டிற் காட்டப்பட்டது.

134. பலநாளு மாற்றா ரெனினு மறத்தைச்
சிலநாள் சிறந்தவற்றாற் செய்க—முலைநெருங்கி
நைவது போலு நசுப்பினுப் நல்லறஞ்
செய்வது செய்யாது கேள்.

எ-து, அறஞ்செய்யப் பலநாளு மாற்றாரெனினு மறத்தைச் சிலநாளாயினுஞ் சிறந்தவைகளானே செய்க; முலையா னெருங்கப்பட் டிறுவதுபோலு நசுப்பினையுடையாய் தான்செய்த நல்லறஞ்செய்வது தன் னற்கேளுஞ் செய்யாதென்றவாறு.

(குறிப்பு) இது, நைமித்திக வொழுக்கத்தின்சிறப்புக் கூறுகிறது. இங்கு அறமென்றது நித்தியகருமமாகிய ஒழுக்கநெறியையென அறிக. பலநாளும்—நாடோறும். ஆற்றாரெனினும் என்றது ஆற்றுதல் தவறலாகாதென்னும் நியதிகுறித்துநின்றது. சிலநாள்—நித்தியத்திற் றூழ்வுதீரச்செய்யும் நைமித்திககருமத்துக்குரிய சிலதினங்கள். சிறந்தவைகள்—சிறந்தவைகளான வொழுக்கங்கள்; அவை நைமித்திககருமங்கள். நல்லறம் செய்வது என்றது சதாசாரஞ்செய்யுமுதவி என்றவாறு. நற்கேள்—தந்தைதாய். கேள்—சாதிபொருமை. 'நல்லறம் செய்வது நற்கேளும் செய்யாது' என்பது இதன் பழமொழி. பொதுவாக மக்கட்பிறப்பையளிக்கும் தாய்தந்தையினும் அதனிற்சிறந்த வருணப்பிறப்பையும் குடிப்பிறப்பையு மளிக்கு மொழுக்கமுடைமை சிறந்ததென்பது இதன் பொருளாயிற்று.

---

* புறநானூறு செய்—௩௪.

135. தெரியா தவர்தந் திறனில்சொற் கேட்டாற்
பரியாதார் போல விருக்க—பரிவிலா
வம்பலர் வாயை யவிப்பான் புகுவாரே
யம்பலந் தாழ்கூட்டு வார்.

எ-து, அறிவில்லாதார் தம்மைச் சொல்லுந் திறப்பாடில்லாதசொற்களைக் கேட்டா லதற்குத் துன்புறாதாராய்ப் பொறுத்திருக்க; பிறன்மே லன்பில்லாத வேதிலார்வாயை யடக்கப்புகுவா ரம்பலந் தாழ்கூட்டுவாரோ டொப்ப ரென்ற வாறு.

(குறிப்பு) இது, புல்லறிவாளரோடு சொல்லெதிராடலாகா தென்கிறது. அறிவில்லாதார் என்றது புல்லறிவாளர் என்றபடி. திறப்பாடில்லாத சொற்களாவன.—சொன்னபடி மெய்ப்பிக்கப்படாது நூன்முறை பிறழவுரைக்கு முரைகள். பரியாதார்போலவிருக்க என்றதனால் அவர்கள்கூறுமுரைகள் கேட்கும்போதே துன்பஞ்செய்யுமாயினும், அதனை அவர்க்குக் காட்டாது உவப்பொடுகேட்பார்போன்று பொறுத்திருக்க வென்றவாறு; வேறுபரிகாரமில்லை என்பது குறிப்பு. பிறன்மேல் அன்பில்லாத ஏதிலார் என்றது அறிவுடையோனொருவனிடத்தும் நண்பின்றி மாறுபடும் அவரது இயல்புகூறியவாறு. அவரதுவாயையடைக்கப்புகுவார்-அவர்சொல்லுவது தவறென்று அவருணரக் காட்டி யடக்கப்புகுவார். அம்பலந்தாழ்கூட்டுவார் என்றது இரவும் பகலு மெப்பொழுதும் புகுவாரும் புறப்படுவாருமுள்ள பொதியில்லைக் கதவுதாழிட்டுத் தலைவாயடைக்கமுயல்வாரோ டொப்பர் என்றவாறு. அம்பலந்தாழ்கூட்டுவார் முயற்சி பயன்படாவாறுபோலப் புல்லறிவாளரோடு சொல்லெதிராடுவார் முயற்சியும் பயன்படாதென்பது கருத்து. அம்பலந் தாழ்கூட்டுவார் என்ற தொடர்மொழிக்குறிப்பே இங்குப் பழமொழியாயிற்று. இது "ஊர்வாயைமூட உலைமூடியுண்டோ" எனப் பிறிதொருவாய்பாட்டால் வழங்கப்படுகிறது. இதில் ஊர்வாய் என்றது அறிவில்லாத சாமானிய சனங்களின்பேச்சையும், உலைமூடி என்றது அடங்கவுரைக்குமுரை அவரடங்காது கொதித்தற்கு ஏதுவாமென்பதையும் குறிப்பாலுணர்த்தி நின்றன.

136. அருவிலை மாண்கலனு மான்ற பொருளுந்
திருவுடைய ராயிற் றிரிந்தும் வருமாற்
பெருவரை நாட பிரிவின் றதனாற்
றிருவினுந் திட்பம் பெறும்.

எ-து, அரிய விலைகளையுடைய மாட்சிமைப்பட்ட அணிகளும், நிரம்பிய பொருளும் புண்ணியமுடையாராயிற் பிரிவின்றியே செல்வத்திற்குத் தகுதியில்லாதார்மாட்டும் வாராநிற்கும்; ஆதலாற் பெருமலைநாடனே! இப்பெற்றிப்பட்ட செல்வத்திற் றம் மனங் கலங்காத வறிவின்செல்வமே நன் றென்றவாறு.

(குறிப்பு) இது, பொருள்படைக்கவேண்டி இழிதொழில்புரியற்க வென்கின்றது. அணிகள்—ஆடையாபரணாதிகள். நிரம்பியபொருள்—தம் சுற்றத்தோடு தாம் ஆரவுண்டு அனுபவித்துப பிறர்க்கு முதவும்படி நிறைந்த பொருளுடைமை. பிரிவின்றி என்றது கிட்டியவழி விலகி ஒதுங்குதற்குரிய இழிகுலத்தவரையும் விலகுதலின்றி என்றவாறு. பெற்றி—இகழ்ச்சிக்குறிப்பு; இது திட்பத்தின் உறழ்ச்சிக்குக் காரணங் காட்டியவாறு. செல்வத்தின்—செல்வத்தைவிட. மனங்கலங்காத அறிவின்செல்வம் என்றது அருவிலைமாண்கலனும் ஆன்றபொருளும் அடைதல்காரணமாக இழிதொழில்புரிய மனஞ்செல்லாத திட்பமுடைமையை. இது பிறரிடத்தின்றிக் குடிப்பிறப்புடையார்மாட்டே யியற்கையாயுள்ளதாயகுணமாதலால், திரிவில்லதாயிற்று. பெறும் என்றது இங்கு நலம்பெறும் என்னும் பொருள்படநின்றமையால் நன்று என்று போந்தபொரு ளுரைக்கப்பட்டது. திருவினுந்திட்பம்பெறும் என்றது பழமொழி. இதன்பொருளே இங் கெடுத்துக்கொண்டபொருளாக வைத்து ஏதுவால் நிரூபிக்கப்பட்டது.

137. தோற்ற மரிதாய மக்கட் பிறப்பினா
லாற்றுந் துணையு மறஞ்செய்க—மாற்றின்றி
யஞ்சும் பிணிமூப் பருங்கூற் றுடனியைந்து
துஞ்ச வருமே துயக்கு.

எ-து, தோன்றுதற்கரியதாய மக்கட்பிறப்புப்பெற்றதனாலே தமக் கியலுமளவு நல்லறத்தைச்செய்க; தடையின்றி யஞ்சப்படும் பிணியு மூப்பு மருங்கூற் றுடனேகூடித் தனக் கறிவுதிரிவாகிய மயக்கத்தா னிறந்துபடல் வருமென்றவாறு.

(குறிப்பு) இது, அன்றறிவாமென்னாது அறஞ்செய்யவேண்டுமென்கிறது. தோற்றமரிதென்றது மக்கட்பிறப்பினது எய்தற்கருமையுணர்த்தியவாறு. மக்கட்பிறப்பினாலென்றது விதிவிலக்குகளையறிந் தொழுகற்பாலீராகியவறம் பிறபிறப்பா லியற்றவியலாமை யுணர்த்தியவாறு.

தமக்கியலுமளவும் நல்லறத்தைச்செய்தலாவது—ஒல்லும்வகையா னற வினையோவாதே, செல்லும்வாயெல்லாம்செயல்" என்ற பொய்யாமொழி கூறியவாறு புரிதல். தடையின்றி அஞ்சப்படும்பிணி—நாச்செற்று விக்குள்மேல் வருதல். துஞ்சு—முதனிலைத்தொழிற்பெயர். துயக்கால் என்னும் மூன்றனுருபு விகாரத்தாற்றொக்கது. பிணியுடனும் மூப்புடனும் கூற்றுடனுங்கூடித் துஞ்சுதல்வரு மெனக் கூட்டுக. பின்னடியிரண்டும் பழமொழிக்கூற்று. அது இங்கு யாக்கைநிலையிலது என்றது துணையேநின்று விதிப்பொருளை முடித்தற் கேதுவாயிற்று.

138. கற்றானுங் கற்றார்வாய்க் கேட்டானு மல்லாதார்
தெற்ற வுணரார் பொருள்களை—யெற்றே
யறிவில்லான் மெய்த்தலைப் பாடு பிறிதில்லை
நாவற்கீழ்ப் பெற்ற கனி.

எ-து, நூல்களைக் கற்றறிந்தானுங் கற்றார்வாய்க் கேட்டறிந்தானும் மல்லாத பிறர் தெளியப் பொருள்களி னுண்மை யறியமாட்டார்; என்னே! அறிவில்லாதானொருவ னுண்மைப்பொருளை யறிந்துசொல்லுதல்,பிறிதொன்றில்லை; நாவலின்கீழ்வீழ்ந்ததொரு பழ மொருவன் பெற்றதுபோலும் என்றவாறு.

(குறிப்பு) இது, முறையான கல்விகேள்விகளில்லாதார்சொல்லும் பொரு ளொருபொருளன் றென்கிறது. கற்றார்வாய் என்ற பன்மை கற்றோர்பலரிடத்தும் பலகாற்கேட்கவேண்டு மென்னும் கேள்விமுறையுணர நின்றது. அல்லாதார் என்றபன்மை கற்றறிந்தவனல்லாதவனும், கற்றார்வாய்க் கேட்டறிந்தவனல்லாதவனுமாகிய இருவரையு மொருங்குணர்த்திநின்றது. இதனால், பொருள்களினுண்மை தெளியவறிந்தானதற்குக் கல்வி கேள்விகளிரண்டு மொருங்குடையனாயிருக்கவேண்டுமென்பது குறிப்பாயிற்று. தெளியவறியமாட்டாரெனக் கூட்டுக. தெளிய—மயக்கமின்றி. அறியமாட்டார் என்ற காரணவினை அறிந்துரைக்கமாட்டார் என்னும் காரியப்பொருளுணர நின்றது. அறிவில்லாதான் என்றது அதிகரித்துநின்ற கல்வி கேள்விக ளின்மையானுளதாய அறிவின்மையுணர்த்திநின்றது. அறிந்துசொல்லுதல் என்றது அறிந்து சொல்லுதலுளதாயின் அது என்றபடி. கீழ்வீழ்ந்ததென்றது மண்ணில் விழுந்து நசுங்கி மணலும் புழுதியும் படிந்ததென்றபடி. ஒருபழம் என்றது அதன் மிகுதியின்மைகுறித்தவாறு. ஒருவன் என்றது பலரும் விரும்பாமை குறித்துநின்றது. பெற்றதுபோலுமென்றது பெற்று

நுகர்வதுபோலு மென்றவாறு. ஒருவன் நாவற்கீழ்ப்பெற்றகனியானது சிறிதுசுவைத்தமாத்திரத்திலேயே யுமிழும்படி சுவையற்ற துவர்க்கொட்டையைப் பெரிதும் அகத்திட்டு அற்பசாரமுடைய தோட்டுத்தசையும் உண்ணற்குவேண்டாத மணலும் புழுதியும் புக நசுங்கி உண்போரா லுதாசீனிக்கப்படுவதுபோலக் கல்வி கேள்விக ளில்லாதான்கூற்றும் கேட்போரால் விரும்பப்படாத சுவையற்றபொருளையே மிகவுமுட்கொண்டு வெளிப்படையில் அற்பசாரமுடையதாய் வேண்டாதனகூடி யுதாசினிக்கும்படியிருக்குமென்பது கருத்து. இதனால், கல்வி கேள்வியுடையோருரைக்கும் பொருளுரையே திராக்ஷையின் காழில்கனிபோல முழுதுமநுபாவ்யமான சுவையுடையதாயிருக்குமென்பது குறிப்பு. சாரமற்றிருத்தலாற் றள்ளத்தக்கதொன்றைத் "தாழங்காய்" என வழங்கும் குறிப்புமொழிபோல அற்பசாரமுடைமையா லுதாசீனிக்கத்தக்க தொன்றை 'நாவற்பழம்' என வழங்கும் குறிப்புமொழியே இங்கு எடுத்துக்கொண்டபொருளை முடித்தற்குத் திட்டாந்தமாகக் காட்டப்பட்ட பழமொழியாயிற்று. இப்பழமொழி "பெருவழி நாவற் கனியினு மெளியனிவனெனப் பேசுகின் றாயே" எனப் பெரியதிருமொழியுள்ளும் *வழங்கப்பட்டது.

139. பெரியாரைச் சார்ந்தார்மேற் பேதைமைகந் தாகச்
சிறியார் முரண்கொண் டொழுகல்—வெறியொலிக்
கோா யினம்வெரூஉம் வெற்ப புலம்புகிற்
றீகா பெடைப்புமா மெண்கு.

எ-து, வலியாற்பெரியாரைச் சார்ந்தார்மேற் றமதறியாமையே பற்றாக வலியாற்சிறியார் மாறுகொண்டொழுகுதல், வெறியாட்டொலியை யோரிபினங்கள் வெருவாநின்ற வெற்பனே! எண்குறைபுங் காட்டின்கட் டீயகாய் புக்கா லங்குவாழு மெண்கினைத் தார் தங்குகின்ற மெழுப்புதலோ டொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இது, தம்மின்வலியாரோடு மாறுகோள்ளலாகா தென்கிறது. பெரியாரைச்சார்ந்தார் என்றது தாமே பெரியராயினும், அவரைச் சார்ந்தொழுகுவாரு மென இருதிறத்தாரையும் அகப்படுத்தி நின்றது. வலி—இடம், பொருள், ஏவல் முதலியவும், ஆற்றலு முடைமை. பேதைமை கந்தாக என்றது பிறிதொருசார்பின்மைபுணர நின்ற இகழ்ச்சிக்குறிப்பு. வெறியாட்டொலி—முருகன் ஆவேசமாக வேலன்

* பத்தாம்பத்து 9-ஆம் திருமொழி பாசுரம் 6.

வெறியாடும் கூக்குரலொலி. ஓநாயினங்கள்—ஓநாய் செந்நாய் நரிமுதலிய துட்டமிருகங்கள். வெருவுதல்—சிங்கமுழக்கென் றஞ்சுதல். இது தெய்வமும் சிங்கமுதலிய கடுமானினங்களும் வாழ்தற்குரிய காடடர்ந்த தென அச்சச்சுவைதோன்ற வெற்பின்சிறப்புக்கூறி யாடேஉமுன்னிலை மொழியை விசேடித்தபடி. எண்கு—கரடி. எடுப்புமாமெண்கு என்றுராயினும் எண்கெடுப்பாமென்பதே கருத்தாகக்கொள்க. ஒழுகல் எண் கெடுப்பாமெனக்கூட்டுக. காட்டிலிருந்த கரடியையெழுப்பிஆட்டுக்கிடை நா யடிபட்டதுபோலும், என்ப திதன் பழமொழி. இதன் விருத்தாந்தம் கரடி தன்வலியாலும், காடடர்த்தியுள்ள தன் னிடவலியாலும், தன்மெய்யின் மயிரடர்த்தியான துணைவலியாலும் சிறந்திருக்க, அதன்வலியறியாது தன்னின் மெலிய கிடையாடுகளைச் சிதறவிடா தொருகளப்படுத்திய கிடைநாய் காட்டிடைப்புகுந்து அக்கரடியையும் யாடெனமதித்துத் தன்வழிப்படுப்பதாயெழுப்புவான்முயல அக்கரடி தன்மெய்யின் மயிரடர்த்தியுள் அந் நாய்க்கவ்விணைச் சிக்கவைத்து தன் வலிமிகுதியால் அந்நாயை யடித்துக் கொல்லுமென்பதாம். இது இங்கு,திட்டாந்தமாயிற்று. இதனாற் பெரியாரைச்சேர்ந்தார் தம் வலியாலும் தம் சார்பின்வலியாலும் துணை வலியாலும் தம்மின் முரண்கொண்டொழுகும் சிறியாரை யிறந்துபடப் புரிவாராதலா லவரோடு மாறுகொள்ளலாகாதென்பது குறிப்பாயிற்று.

140. மரம்போல் வலிய மனத்தாரை முன்னின்
றிரந்தார் பெறுவ தொன்றில்லை—குரங்கூசல்
வள்ளியி னாடு மலைநாட வஃதன்றே
பள்ளியு ளையம் புகல்.

எ-து, மரம்போலே வலியதொரு மனத்தையுடையாரை முன்னே நின்றிரந்தார் அவராற்பெறுவ தொருபொருளுமில்லை; குரங்குகள் வள்ளிக்கொடியின்கணிருந் தூசலாடு மலைநாடனே! அதுவன்றே அருந்தவரிருந்தேவாழும் பள்ளியு ளையம்புகுத லென்றவாறு.

(குறிப்பு) இது, வன்னெஞ்சர்பாற் சென் றிரன் திரவற்க வென்கின்றது. இரப்போரது பரிதாபங்கண் டிளகாதநெஞ்சென்பார் 'மரம்போல்வலியமன' மென்றார். "மரங்கள்போல்வலியநெஞ்சு" என்பது திருமாலை.* இங்கு மரத்துக்கு வன்மையாவது எரிதழலின் பரிதாபங்கண்

* பாசுரம்-உஎ.

டிரும்பு மிளகியுருகுவதாயிருக்க மரம் சிறிதுமிளகாது வெந்து கரியாக மாறுவது. முன்னே நின் றிரந்தார்பெறுவ தொருபொருளு மில்லை என் பதற்கு அவர்காணுது காந்து வஞ்சித்துக்கொள்வார்க்கு எல்லாப்பொரு ளும் அவர்தாமேகொள்ளக் கொடுப்பர் என்பது குறிப்பு. 'குரங்குஊசல் வள்ளியினுடும்' என்றது. இன்பச்சுவைதோன்ற மலையைவிசேடித்தபடி. அது என்ற சுட்டு அறுவாதப்பொருளில் வந்தது. அன்றேவென்றது தெளிவுறுத்திநின்றது. அருந்தவர்–அசகரவிருத்தியுடைய முனிவரர். அசகரவிருத்தியாவது தா முணவுவேண்டி ஓரிடமும் செல்லாது தாமுறையுமிடத்தே பிறர்வலிதிற்கொணர்ந்து வாய்ப்பெய்யுமுண வினையுண் டுயிர்வாழ்தல். இருந்தேவாழும்பள்ளி என்றது வேறொரு விருத்தியாலும் பொருளீட்டலின்றி இருத்தன்மாத்திரத்துக்கு இடமா யிருக்கும் ஆச்சிரமம் என்றபடி. "சன்னுசிமடத்திற் பிச்சைக்குப் போனதுபோலும்" என்ப திதன் பழமொழி. அருந்தவர் அருளுடைய ராயினும் பொருளுடையரன்மையால் அவர்பாற்சென் றிரந்தார்பெறுவ தொருபொருளுமில்லாதவாறுபோல வன்னெஞ்சர் பொருளுடையராயி னும் அருளுடையரன்மையால் அவர்பாற்சென் றிரந்தோரும் பெறுவ தொருபொருளுமில்லையெனப் பொருளொடுபொருத்தி யுரைத்துக் கொள்க. இதனால் இரப்போர் அருளும் பொருளு முடையாரைச் சென் றிரக்கவேண்பது குறிப்பாயிற்று.

141. அற்றுக நோக்கி யறத்திற் கருளுடைமை
முற்ற வறிந்தார் முதலறிந்தார்–தெற்ற
முதல்விட் டஃதொழிந்தா ரோம்பா வொழுக்க
முபல்விட்டுக் காக்கை தினல்.

எ-து, அறத்திற்குப் பண்பாவ தருளென் றத்தன்மைத்தாக வாராய்ந்து நிரம்பவறிந்தா ரறத்திற்குக் காரண மறிந் தறஞ்செய்தோராவார்; தெளியவறத் திற்குக் காரணமாகிய வருளைப் பிறால் விட் டதனோடுகூடி யறத்தையொழிந் தாருடைய பாதுகாவாக் கொடைமுதலிய பிறவொழுக்கத்தைச் செய்தல் முயலை விட்டுக் காக்கையைத்தின்னுமதனையொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இஃ தருளோடுசெய்யும் அறமே இன்பம்பயக்கு மென்கிறது. பண்பாவது என்றது அவாய்நிலையான்வந்தது. அத்தன்மைத்தாக என்றது அருளுடைமையென்னும் அவ்விலக்கணமுடையதாக என்றவாறு. ஆராய்ந்து நிரம்பவறிதலாவது அறநூல்பலவற்றையுங் கற்று ஐயமின்றித் தெளிவடைதல். இவ்வறிவு அறத்தின்காரணவுணர்வாகி அதன்காரியமாகிய அறத்தைச் செய்விப்ப தொருதலையாதலால், அறிந்தார் அறஞ்செய்தோராவர் என உரை விரித்துரைக்கப்பட்டது. பிறரால்விடுதலாவது அற மொருபொருளென்றுகருதாத உலோகாயதிகர் முதலிய பிறர்சொல்லுஞ் சொற்களைக் கேட்டு விடுதல் என்றவாறு. பாதுகாவாவொழுக்கம் எனக் கூட்டுக. பாதுகாவாவொழுக்கம் என்றது செய்வோனை அறமாகிப் பாதுகாக்கமாட்டாத பிறவொழுக்கமென்றவாறு. அவை நடரும் விடரும் தூர்த்தருமுதலிய நகைவகையாராகியமாக்களுக்குக் கொடுக்கும் அறனிலாக்கொடை முதலியனவும், அறநூலுள் விதியாதனவும். முயலைவிட்டுக் காக்கையைத்தின்னுமதனோடொக்குமென்றது மென்மையுஞ் சுவையு முடைத்தா யுண்ணுதற்குரியதாய்க் கொள்ளப்பட்ட முயலினதூனை யொழித்து, வன்மையும் வெகுட்டுமுடையதா யுண்ணுதற்குரியதன்றென்று விலக்கப்பட்ட காக்கையினூனை நுகருமதனோடொக்கு மென்றவாறு. முயலூனுக்கும் காக்கையூனுக்கு முள்ள வேற்றத்தாழ்வுபோலும் அருளுடையறத்திற்கும் அஃதில்லாவறத்திற்கு முள்ள வேற்றத்தாழ்வென்பது கருத்து. முயல்விட்டுக்காக்கைதினல் என்பதிதன் பழமொழி. இது "ஏரார்முயல்விட்டுக்காக்கைப்பின் போவதே" எனச் சிறியதிருமடலுள்ளும்*, "அன்பிருத்தியடியேனைக் கூழாட்கொண்டருள்செய்தவாரூரர்தம், முன்பிருக்கும் விதியின்றி முயல்விட்டுக்காக்கைப்பின்போனவாறே" எனத் தேவாரத்திலும்† வழங்கப்பட்டது.

142. நாணார் பரியார் நயனில செய்தொழுகும்
பேணா வறிவிலா மாக்களைப்—பேணி
யொழுக்கி யவரோ டுடனுறை செய்தல்
புழுப்பெய்து புண்பொதியு மாறு.

---

* கண்ணி-8.

† திருநாவுக்கரசுநாயனார்தேவாரம், திருவாரூர்ப் பழமொழிப்பதிகம். பாசுரம் 2.

எ-து, பழிநாணுதற்குரியமேலவரின்றி நன்மையில்லாதனவற்றைச் செய்தொழுகும் பிறரால் விரும்பப்படாத அறிவில்லாதமாக்களை விரும்பிநடாத்தி யவரொடு தாமுடனுறைதலைச்செய்தல், சீழின்மூழ்கியபுழுவை யுள்ளேபெய்து தம் புண்ணைப பொருத்தியதனோடொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இது, தமராயிருப்பினும் சிற்றினத்தாரை யபிமானிக்கலாகாதென்கிறது. பேணி—தமரென்றுவிரும்பி. நடாத்தி—நல்லொழுக்கில் தாமே நடவாத அவரை வலிந்து நடத்தி. உடனுறைதலைச்செய்தல்—அவரோடு ஒருகுடியாகக் குடிவாழ்தல். சீழில் மூழ்கியபுழு—தம்முடலிற் புண்ணையுண்டாக்கி யுடைந்துபுறப்படும் சீழின் மூழ்கியபுழு; இது தம் குடியுடையார்க்குத் துன்பமுண்டாக்கி அக்குடியைவிட்டு விலகும் சிற்றினத்துக்கு உவமை. சீழ்—அவர் மூழ்கிக் கிடக்கும் இழிகுணத்துக்கு உவமை. தாமே புறப்பட்டொழிதற்குரிய சிற்றினத்தாரைத் தமரென்று அபிமானித்து அகத்துட்கொண் டுடனுறையச் செய்தல் அவ்வாறொழிதற்குரியபுழுக்களைத் தமவென்றபிமானித்துப் புண்ணிற்பொதிந் துடலகத்துட்கொண்டு மூடுதலானுண்டாகும் துன்பம் போலும் இறந்துபடுந்துன்பினை யுண்டாக்கு மென்பதாம். இதன் பழமொழி "கண்ணோட்டம் செய்பார் கருவியிட்டாற்றுவார், புண்வைத்து மூடார் பொதிந்து" என நீதிநெறிவிளக்கத்துள்ளும்* வழங்கப்பட்டது.

143. பரந்தவர் கொள்கைமேற் பல்லாறு மோடார்
நிரம்பிய காட்சி நிரந்தறிந்து கொள்க
வரம்பில் பெருமை தருமே பிரம்பூரி
யென்றும் பதக்கேழ் வரும்.

எ-து, பலவேறுவகைப்பட்டுப் பரந்த சமயத்தாரொழுக்கத்தின்மேற் பலநெறிக்கண்ணும் மோடாதே யச்சமயத்தார்கொள்கைகளுள் நன்மைநிரம்பிய கொள்கை யாராய்ந்தறிந்தே தமக்குக் கொள்கையாக வொழுகுக; ஒழுகின் அவ்வொழுக்க மெல்லையில்லாதபெருமையைத் தரும்; பிரம்பூரியென்னும்பெயருடையநெல் என்றும் பதக்கேழ்வருமாதலா லதுபோல வென்றவாறு.

(குறிப்பு) இது, சமயவொழுக்கநெறிபலவற்றுள்ளும் அவரவர் தகுதிக்கேற்றநெறியொன்றுள் நின்றொழுகுதல் சாலுமென்கின்றது. பலவேறுவகைப்பட்ட சமயங்களாவன:—வைதிகமும், அவைதிகமும் அவற்றின் அகமும் புறமுமாகி யொன்றினொன்று வேறுபட்ட பலசமயங்கள்.

---

* செய்யுள்-௫.

அச்சமயத்தார்கொள்கையாவது அவ்வவர் கொண்டொழுகும் வெவ்வேறொழுக்கவகைகள்; அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் முதலியனவும் பிறவுமாம். ஒழுக்கத்தின்மேல் என்றது ஒழுக்கங்களுள்ளே என்றவாறு. பலநெறிகளாவன, தாசமார்க்க முதலியன. ஓடாதே என்றது தத்தம் நிலைமைக்கியலாத ஒழுக்கநெறிகள்பலவற்றையுங்கொண்டொழுகாமல் என்றவாறு. அச்சமயத்தார்கொள்கைகளுள் என்றது அவ்வவர் சமயவொழுக்கநெறிகளுக்குள்ளே என்றவாறு. நன்மை நிரம்பியகொள்கை என்றது உபாசகராகிய தமக்குக் கடைபோகவொழுகுமாறு சீர்மை நிரம்பிய யாதாயினுமோ ரொழுக்கநெறியை என்றவாறு. தமக்குக் கொள்கையாக—தாங்கொண்டொழுகும் ஒழுக்கநெறியாக. எல்லையில்லாத பெருமை—வீடுபேறு. "பிரம்பூரி யென்றும் பதக்கேழ்வரும்" என்றது பிழைபட நின்ற பழமொழிக்கூற்று. இது "பரம்பூரி—யென்றும் பதக்கே வரும்" என்றிருக்கவேண்டும். இதற்கிணங்க உரையையும், "பரம்பூரி யென்னு நெல் என்றும் பதக்கேவருமாதலால் அதுபோல" என்று திருத்திக்கொள்ளவேண்டும். பரம்பூரியென்னும்நெல்—பரம்பூரியாகிய நெல். பரம்பூரி—பரம்புமரமூர்ந்து பழனந்திருத்தியகூலி. என்றும் என்றது கரம்புநிலத்தூர்ந்தஞான்றும், களர்நிலத்தூர்ந்தஞான்றும், வளவயலுளூர்ந்தஞான்றும் என்றவாறு. பதக்கேவரும் என்றது அவ்வூர்ந்தகூலியாகிய பதக்குநெற் கிடையாமற்போகாது என்றவாறு. இதன்பழமொழி "கரம்பூர்ந்தாலென்ன? களரூர்ந்தாலென்ன? பரம்பூர்ந்தகூலி பதக்கு"* என்பதாம். இது, ஒருவன் ஒருவனை யொருதொழிலி லேவிக்கொள்ளுமிடத்து அத்தொழின்முற்றுதலாலே ஏவிக்கொள்வோனடைதற்குரிய விளைபொருளின் இன்மை யுண்மையும் ஏற்றத் தாழ்வும் கருதாது தொழில்புரிந்தோனுக்கு அததொழில்புரிந்தவளவானே அதற்குரியகூலி தவறாதளிக்கக்கடவன் என்னுங் குறிப்பில் வழங்கப்படுவதால், இறைவனருளிய சமயவொழுக்கநெறிகளுள் ஏற்றத்தாழ்வுபாராது ஏதேனுந் தமக்கியலுவதொன்றைக் கடைப்பிடித்தொழுகுவார் இறைவனதருளை யேற்றத்தாழ்வின்றித் தவறாதுபெறுவர் என்பதை முடித்தற்குப் பொதுவகையால் ஏதுவும், சிறப்புவகையாற் றிட்டாந்தமுமாயிற்று. இப்பழமொழிப்பொருள் "மாறடித்தகூலி மடிமேலே" எனப் பிறிதொரு

---

* பதக்கு இரண்டுமரக்கால் நெல். இக்காலத்து முத்திரைபபடி இரண்டேகால் கொண்டது ஒருகூலிமரக்கால் என்பது மதுரைசார்நாட்டுவழக்கு.

வாய்பாட்டானும் வழங்கப்படும். இங்கு மாறடித்தலென்பது புழுதிநெல் விதைப்பில் உழவுசான்மறையப் புதையன்மாறார்தற்குப் பெயராகும். இதனுள் அடித்தல் என்பது ஊர்தற்பொருளுணர்த்துமென்பதைப் பாம்பூர்தலைப் பாம்படித்தல் என்றும், பிணையலூர்தலைப் பிணையலடித்தல் என்றும் வழங்குதலானும் அறிக. மடி—முன்றானை (முந்தி). இது தவறாது கடனைபெறுதற்குச்சாதனமென்னும் குறிப்புணர்த்திவருவது. இதனை "வெந்ததுபோதும் முந்தியிலேபோடு" என்னும் வழக்கானு முணர்க. இதனால், "மாறடித்தகூலி மடிமேலே" என்பதற்குப் புதையன்மாறார்த்தவயலுள்விளையும் நெல்லின் ஏற்றத்தாழ்வுகருதாது அப்புதையன்மாறார்தற்றொழின்மாத்திரங்கொண்டு தவறாது கூலிகொடுப்பாரைப்போல, ஒருவனை யொருதொழிலிலேவிக்கொள்வோன் தனக்கு அத்தொழிலால்விளையும் பயனளவுகருதாது தொழிலளவேகருதிக் கூலியளிக்கக்கடவன் என்னுங் குறிப்புத் தோன்றுதல் காண்க. இப்பாட்டினால் இறைவனருளிய வேதாகம வொழுக்கநெறிகள் பலவிருப்பினும், அவற்றுள், தத்தமக்கியைந்தவொழுக்கமொன்றைக் கடைப்பிடித்தொழுகுதல் பயனுற் றாழ்வின்றிச் சாலபுடையதாகும் என ஒழுக்கநெறியின் மயக்கறுக்கப்பட்டது. இவ்வாறே கீதையினும், "யாவா நர்த² உத³பாநே ஸர்வத: ஸம்ப்லுதோத³கே । தாவாந் ஸர்வேஷு வேதே³ஷு ப்³ராஹ்மணஸ்ய விஜாநத: ॥"* என்று சொல்லப்பட்டிருக்கிறது.

144. தமரல் லவரைத் தலையளித்தக் கண்ணு
மமராக் குறிப்பவர்க் காகாதே தோன்றுஞ்
சுவர்நிலஞ் செய்தமையக் கூட்டியக் கண்ணு
முவர்நில முட்கொதிக்கு மாறு.

எ-து, தமக் குறவல்லாதபகைவரைத் தாம் தலையளித்தாலு மது தலையளிப்பாகாதே விரும்பாதகுறிப்பா யப்பகைவர்க்குத் தோன்றும்; சுவர்நிலமாகச் செய்து நீரமையச் செறியக்கூட்டிவைத்தாலு மவ்வுவர்மண் ணுட்கொதித் ததிருமாறுபோலு மது வென்றவாறு.

(குறிப்பு) இது, பகைவரைத் தலையளிபுரிந்து நட்புபொருந்தலாகாதென்கிறது. நிலம் இரண்டும் மண் என்னுந்துணையாய்நின்றன. "உவர்நிலமுட்கொதிக்கும்" என்பது இதன் பழமொழி. இது ஒன்றன் கெட்டசுபாவம் மாறாதென்னுங் குறிப்பில் வழங்கப்படுவது.

---

* அத்யாயம் 2. ஸ்லோகம் 46.

இதனை, ஒருவற்கு அரணாயுள்ள சுவர்மண்ணின்வேறுபட்ட உவர் மண்ணை அச்சுவர்மண்ணோடு தண்ணீர்வார்த்துக்குழைத்து ஒன்று கூட்டி ஒரு பேரரணாகச் சுவரிட்டுவைப்பினும், அவ்வுவர்மண் நாளடைவில் உட்கொதித்துதிர்ந்து அச்சுவரை யடியறுத்துவீழ்த்தி அரணழிப்பதுபோலத் நமக்கரணாயுள்ள தமரொடுபொருந்தாத பகைவரைத் தண்ணளிபுரிந்து தமருடன்கூட்டித் தமக்கொரு பேரரணாகக்கொள்ளினும், அவர் நாளடைவில் உட்கொதித்துக் கிளைத் தொட்டாது விட்டுவிலகி அரணழிப்பரெனப் பொருளொடுபொருத்தியுரைத்துக்கொள்க.

145. ஒல்லாத வின்றி யுடையார் கருமங்க
ணல்லவா நாடி நடக்குமா—மில்லார்க்
கிடரா யியலு மிலங்குநீர்ச் சேர்ப்ப
கடலுள்ளுங் காண்பவே நன்கு.

எ-து, இயலாதனவின்றிப் பொருளுடையார் செய்யத்தொடங்கியகருமங்க ணல்லனவேபெற்றுநடக்கும்; பொருளில்லாதார்க்குச் செய்யத்தொடங்கிய கருமங்க ளிடராயேநடக்கும்;இலங்குநீர்ச்சேர்ப்பனே! அவ்வுடையார் கடலுள்ளே புக்காலுந் தமக்குநல்லனவாவனவேசெய்துகொள்வாரென்றவாறு.

(குறிப்பு) இது, கைப்பொருளுடையாராய்க் கருமம்புரிக என்கிறது. இயலாதனவின்றி என்றது செய்யத்தொடங்கியகரும மினிது முடிதற்குச் சாதகமாகாத போலிக்கருவிகளைத் துணையாகப்பெறாமல் என்றவாறு. நல்லன—அக்கரும மினிதுமுடிதற்குரிய சிறந்தகருவிகள். இடராயே நடக்கும் என்றது இடருடையதாகி யழியுமென்றபடி.. இதனாற் கைப்பொருளுடைமையி னன்மையை விதிமுகத்தாற்கூறியதுணையானமையாது எதிர்மறைமுகத்தான் அஃதின்மையின்றீமையு மொருங்கு கூறப்பட்டது. "கடலுள்ளுங்காண்பவே நன்கு" என்றது பழமொழிக் கூற்று. இதன் பழமொழிவடிவம் வழக்குஞ் செய்யுளும்நோக்கி வந்துழிக் கண்டுகொள்க.

146. கடிப்பத் தலைகீறிக் காது மிழந்து
கிடைத்தாரா வென்பதூஉம் பட்டு—முடத்தொடு
பேர்பிறி தாகப் பெறுதலாற் போகாரே
நீர்குறி தாகப் புகல்.

எ-து, மிகத் தலைவிழிந்து தங் காலுமிழந் தக்கால்க ளுடையைத் தரா வென்றசொல்லப்பட்டு முடத்துடனே பிறிதொருபெயர்பெறுவாராதலா னீர் சுருங்கி யளவுபட்டவழி யிழிந்துபோகலாயிருக்கப் போதலரியபுனலுட் புணைமுதலாயினவற்றாற் போவாரென்றவாறு. இதனாற் போந்தபொருள் தமக் கேதம் படவருவன செய்யலாகாவென்றவாறும்.

(குறிப்பு) இது, எளியவழியைக் கைவிட்டு அரியவழியிற் செல்லலாகாதெனகிறது. எளியவழியாவது ஒருகான்யாற்றுவெள்ளம் அகன்று பரந்தவிடத்து இழிந்துநடந்துபோம்படி ஆழமின்றியிருப்பதுபோலும் ஏதமின்றிச்செல்லும் பலதுறைகள். அரியவழியாவது அவ்வாறு பாறைநெருக்கும்பள்ளத்திழிவுமுள்ளவழி ஒடுங்கி யாழ்ந்து விசையுடன் செல்லும் வெள்ளத்துப் புணைபற்றிச்செல்லுந் துறைபோலுந் துறைகள். நீர்குறிதாகப்புகல் என்றது நீர்சுருங்கச்செல்லுதல் உளதாயிருக்க வென்றவாறு. உளதாயிருக்கவென்பது குறிப்பெச்சம். போதலரியபுனலுட் புணைமுதலாயினவற்றால் என்பது பிறகுறிப்பால் வருவித்துரைக்கப்பட்டது. தலைசிறதலும் காலிழத்தலும், பாறையிற் றாக்குண்ணலானுண்டாகும் அவயவவிகாரங்களெல்லாமடங்க ஆகியு மாதமுமா யுரைக்கப்பட்டன. நடைத்தாராவென்பதுடம்பட்டு என்றது அவ்வவயவங்கள் விகாரப்படுதன்மாத்திரமேயன்றி யவற்றின்றொழினிகழ்ச்சியு மிலவாமொழியுமென்பதை யுணர்த்துதற் குபலக்கணமாயிற்று. முடத்துடனே பேர்பிறிதாகப்பெறுதலால் என்றது அம்மட்டிலொழியாது முடம், கூன், கண்ணறை, காதறை, கறுவாய் முதலியபெயர்களையும் பெறுதலால் என்றவாறு. பெறுதலாற் போகார் எனக் கூட்டுக. இப்பாட்டுமுழுதும் பழமொழிக்கூற்று. இது பிறிதுமொழிதலாய்நின்று தமக்கு ஏதம்பட வருவன செய்யலாகாதென்னும் விலக்குவிதிப்பொருளைமுடித்தற் குபகாரமாயிற்று. நமக்கு இதமாவனசெய்யவேண்டுமென்பது கருத்து. இப்பழமொழிவடிவமும் வழக்குஞ் செய்யுணோக்கி வந்துழிக் கண்டுகொள்க.

147. பொருளல்லார் கூறிய பொய்க்குறளை வேந்தன்
தெருளுந் திறந்தெரித லல்லால்—வெருளவெழுந்
தாடு பவரோடே யாடா ருணர்வுடையா
ரடுமேனைப் பொய்க்காலே போன்று.

எ-று, ஒருபொருளிற்கொள்ளப்படாதோர்சொல்லிய பொய்யாகியகுறளையைப் பொய்யென்று வேந்தன் றெளியுந்திறங்களை யாராய்ந்து வேந்தனைத் தெருட்டுதலல்லாற் குறளையைச்சொல்லப்பட்டவர்கள் வெருளும்படி யரசன் மருங்கேயிருந்தவுணர்வுடையார் குறளைசொல்லியாடுகின்றவர்களுடனே தாமு மெழுந் தாடுமணைப்பொய்க்காலேபோன் றாடா ரென்றவாறு.

(குறிப்பு) இது, அரசனையணுகியிருக்கும் அறிவுடையோர் கோளுரைப்பாரோடு கூடியுரைக்கலாகாதென்கிறது. ஒருபொருளிற்கொள்ளப்படாதோர் என்றது பலராலு நன்குமதிக்கப்படும் யாதேனும் ஒரு நிலைமையில்லாதவர் என்றபடி; அந்நிலையுடையோர் பொய்க்குறளை கூறு ரென அவரை விலக்கியவாறு. குறளை—கோளுரை: அதாவது உரைக்கப் படுவோர் முன்னிற்பக்கூறாது புறங்கூறல். பொய்க்குறளை என்றது மெய்க்குறளையை விலக்கியவாறு. குறளையைச் சொல்லப்பட்டவர்கள்—கோளுரைப்போராற் சொல்லப்படுவோர். குறளைசொல்லியாடுகின்றவர் என்றது அபிநயத்தோடுசொல்லும் அவரது இயல்புகூறியவாறு. ஆடார் என்றது உரையாடார் என்றவாறு. "ஆடுமணைப் பொய்க்காலேபோன்று" என்பது பழமொழிக்கூற்று. ஆடுமணை—தூங்குமஞ்சம்; அதன்பொய்க் கால்—அதனைத் தாங்கிநிற்கு முறுப்புப்போலத் தோற்றத்திற்காட்டி ஒட்டிக்கொண்டு உடனாடும் அத் தூங்குமஞ்சக்கால்கள். இவை முன்னும் பின்னும் முரண்படச்செல்லுந் தூங்குமஞ்சத்தை யொட்டிநின்று தாங்குவனபோன்று உடன்செல்லுதலால், முன்னும் பின்னும் முரண்படச் சொல்லும் பொய்க்கோளுரையைத் தாங்கியுரைப்பார்போன் றொட்டியுடன் சொல்லும் அறிவிலார்க் குவமையாயின. "ஆடுமணைப் பொய்க்கால்" என்ற தொடர்மொழி பழமொழிக்கூற்றாய் அறிவுடையோர் அங்ஙனம் செய்யார் என்னும் பொருளை முடித்தற்கு விசேடணமாயிற்று. இங்குத் "தூங்குமஞ்சக்கால்கள்" என்னுந் தொடர்மொழியே ஒட்டியுடனாடுவாரையுணர்த்துங் குறிப்புமொழியாகிய பழமொழியாயிற்று.

148. முன்னலிந் தாற்ற முரண்கொண் டெழுந்தோரைப்
பின்னலிது மென்றிருத்தல் பேதைமையே—பின்சென்று
காம்பன்ன தோளி கடிதிற் கடித்தோடும்
பாம்பின்பற் கொள்வாரோ வில்.

எ-று, மிக முரண்கொண்டெழுந்து முந்துறத் தம்மைநலிந்தாரையொறுத்தே தாம் பின்புநலிவேமென்றுகருதியிருத்த லறிவின்மையேயாம்; மூங்கிலன்னதோளினையுடையாய்! கடித்தோடும்பாம்பினைப் பின்னோடிச்சென்று பல்லினைப்பறித்துக்கொள்வா ரில்லையாதலா லென்றவாறு.

(குறிப்பு) இது, தன்னை யொறுக்கவருவாரை முன்னேயொறுக்க வென்கிறது. ஆற்றமுரண்கொண்டெழுந்து முன்னலிந்தாரையென விகுதிபிரித்துக் கூட்டுக. நலிந்தாரென விரைந்தபொருளில் இறந்தகாலம் வந்தது; நலியவருவாரை யென்பது கருத்தாகக்கொள்க. ஒருதே என்றது அவரொறுத்தற்குமுன்பே அவரையொறுத்து நலியச்செய்யாமல் என்றவாறு. இருத்தல் பேதைமை எனக் காரியம் காரணமா யுபசரிக்கப்பட்டது. பின்சென்று கொள்வார் எனக் கூட்டுக. "கடிநிற் கடித்தோடும்—பாம்பின்பற் கொள்வாரோவில்" என்பது பழமொழிக்கூற்று. இது குறிப்பால் நலியவரும்பகையை முற்பட வொறுக்கவேண்டுமென்னும் விதிப்பொருளைமுடித்தற்குத் திட்டாந்தமாயிற்று. பின்னுடிச்சென்று என்றது பின்பொருகாலாந்தரத்திற்சென்று என்றவாறு. பல்லினைப்பறித்துக் கொள்வார் என்றது பல்லினை வலிந்துபறிப்பார் என்றபடி. "கடித்துப் போனபாம்பை யடித்துப்பயனென்ன?" என்பது இதன் பழமொழி. அது கடிக்கவரும்போதே அடித்துவிடவேண்டுமென்பது இதன்கருத்து.

149. நெறியா லுணராது நீர்மையு மின்றிச்
சிறியா ரெளியாரா லென்று—பெரியாரைத்
தங்கணேர் வைத்துத் தகவல்ல கூறுத
திங்களை நாய்குரைத் தற்று.

இ-து, நெறிமையாலுணராதே தகுதியுமின்றிப் பெரியாரை யெளியரென்றுகருதிச் சிறியார் தங்கட்குநேராகக்கொண் டப்பெரியார்க்குத் தகவல்லாதனகூறுத திங்களை நாய்குரைத்தாற்போலு மென்றவாறு.

(குறிப்பு) இது, பெரியாரைப்பழிப்பார் இகழப்படுவாரென்கிறது. நெறிமையாலுணர்தலாவது அறமே கண்ணாகவொழுகுமவாறு ஒழுக்க வகையாலுளதாய உயர்வையுணர்தல். தகுதி—இங்கு அவரது பழியறிந் துரைத்தற்கேற்றதோ ரதிகாரநிலைமை. பெரியார்—கல்வி, அறிவு, ஒழுக்கம், குடிப்பிறப்புமுதலிய வுயர்வுகளான் மிக்கார். எளியரென்று கருதி என்றது தகவல்லசொல்லுவார்க் கொருதீங்கிழைக்குமாற்றலுடைய ரல்லரெனநினைத்து என்னும் குறிப்புணர்கின்றது. சிறியார்—கல்வி, அறிவு, ஒழுக்கம், குடிப்பிறப்புக்களின்றிக் காமசாரவொழுக்கமே கண்ணாகவுடையவர். சிறியார்கூறுதல் எனக் கூட்டுக. நேர்வைத்தல்—நேராகாத அவரை நேராக வலிந்துவைத்தல். அவர்க்குத் தகவல்லாதனகூறுதல்—அவர் பெருமைக் கேதுவாகிய கல்வி, அறிவு, ஒழுக்கம், குடிப்பிறப்பு

முதலியவற்றுக்கு இழுக்கங்கூறுதல். திங்களை நாய்குரைத்தாற்போலும் என்றது திங்களை இரவிற்கண்டு நாய் குரைப்பதுகொண்டு அத்திங்களுக் கொரு திருட்டுத்தன்மையுண்டென்று உலகங்கொள்ளா துபேக்ஷிக்கு மாறுபோலப் பெரியாரைச் சிறியார்கூறுந் தகவின்மை அவர்பாலுண் டென்று உலகங்கொள்ளாது உபேக்ஷிக்கு மென்றவாறு. இதன் பழமொழி, "சந்திரனைக்கண்டு நாய் குலைக்கிறது" எனப் பெரியாரையிகழுஞ் சிறியாரைக் குறித்து உலகவழக்கில் வழங்கப்பட்டுவருகிறது.

150. ஆற்றுந் தகைய வரசடைந்தார்க் காயினும்
வீற்று வழிபல்லால் வேண்டினுங் கைகூடா
தேற்றார் சிறியா ரெனல்வேண்டா நோற்றார்க்குச்
சோற்றுள்ளும் வீழுங் கறி.

எ-து, எல்லாச்செல்வங்களையுந்தரவல்ல தகைமையையுடைய வரசுகளை யடைந்தார்க்கேயாயினும் புண்ணியமுள்ளவழியல்லது விரும்பிமுயலினுஞ் செல்வங்கள் கைகூடா; அறிவுடையாரல்லார் குணத்தாற்சிறியரேயாதலி னிவர்க் காவதொருசெல்வ மில்லையென் றிகழவேண்டா; நோற்றார்க்குத் தாமுண்கின்ற சோற்றுள்ளேயுந் தேடிவருந்தாமே கறிவந்துவிழு மாதலானே யென்றவாறு.

(குறிப்பு) இது, ஒருவரது நிலைமையினிழிவுபற்றி வறியரென்று இகழலாகாதென்கிறது. அரசுகளையடைதலாவது அரசியல் நடத்தற் குரிய உத்தியோகங்களையுடையராதல்;இங்கு அரசென்றது அரசியல் நடத் தற்குரிய உத்தியோகங்களுக்கானமையால் ஆகுபெயராயிற்று புண்ணிய முள்ளவழிபல்லது என்றது புண்ணியமுள்ளவழியல்லாத துர்ப்பாக் கியமுள்ளவழியென்றவாறு. அன்னமக்கு மறுதலைப்பொருளுண்மையால் இவ்வாறு பொருளுரைத்துக் கொள்ளத்தக்கது. அல்லாக்கால் தடையூழாகிய துர்ப்பாக்கியமில்லாதவழியும் முயற்சிக்குப் பயனில்லையென் னும்பொருளுடையதாய், முயற்சியைவிதிக்கும் வாக்கியங்களோடு முரண் படுமென வறிக. வீறுடைமைக்குக் காரணமாகிய புண்ணியம் வீறெனப் பட்டது. வீறு-மேம்பாடு. வேண்டினும் எனக் காரியம் காரணமாயுபசரிக்கப்பட்டது. கைகூடாவென்றது செல்வமடைதற்கு உத்தியோகமே காரணமென்போர்க்கு அது பிறழ்ச்சியுடைத்தெனக் காட்டியவாறு. தேற்றார் என்றது 'தேற்றாவொழுக்கம்' என்புழிப்போலத் தவினையுணரா நின்றது. சோதனையிற்றேறிய கல்வியறிவுடையவரல்லார் என்பது கருத்

தாகக்கொள்க. குணம்-செல்வமடைதற்குரிய சீலம். அது, பெரியாரிடத்துப் பணிவு, நல்லொழுக்கம் மடியின்மை முதலியன. அவற்றாற் சிறியராதல்-அவை பெரிதுமிலராதல். ஒரு செல்வமில்லை என்பது ஒருசெல்வமுமில்லை என்றிருக்கவேண்டும். நோற்றார்க்கு என்றது துய்க்குமூழுண்டாக நோற்றார்க்கு என்றவாறு. உண்கின்றசோறு-உண்ணும்படி கலத்திற் படைக்கப்பட்டுண்டுகொண்டிருக்குஞ்சோறு. தேடிவருந்தாமே கறி வந்துவீழுதலாவது பரிமாறுவார் கூடையிலிருந்த கறியறியாது அதிற் சோறெடுத்துப்படைக்க அச்சோற்றில் மறைந்திருந்த கறி யிடுவோருமறியாது படைக்கப்பட்டுக் கிடத்தல். இது, கற்றுத்தேறிப் பொருள்தேடு மாற்றலில்லாதார் வேண்டுவன துய்க்கப்பெறார் என்பார்க்கு அதுவும் பிறழ்ச்சியுடையதெனக் காட்டியவாறு. தொகுத்துண்ணு மாற்றலிலாயினுந் துய்க்குமூழுளவழிச் சோற்றுள்ளுங் கறி தானேவீழத் துய்ப்பர்; அதுபோலக் கல்வியிற்றேறிய அறிவுடையரல்லாயினும் திருவுடையராக நோற்றார்க்குச் செல்வமுண்டாவது ஒருதலையாதலால் அவரை வறியரென்றிகழலாகாதெனப் பொருண்முடிவு கூறுக. "நோற்றார்க்குச், சோற்றுள்ளும் வீழுங்கறி" என்பது இதன் பழமொழி. சோற்றுள்ளும் என்னும் உம்மை பிறவாற்றானும் வருதலி னெளிமையுணர நின்றது.

151. வழங்கலுந் துய்த்தலுந் தேற்றாதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செல்வம்—தழங்கருவி
வேய்முற்றி முத்துதிரும் வெற்ப வதுவன்றே
நாய்பெற்ற தெங்கம் பழம்.

இ-து, பிறர்க்குக்கொடுத்தலுந் தானுகர்தலுஞ்செய்யமாட்டாதான்பெற்ற முழங்குமுரசினையுடையசெல்வம், முழங்காநின்ற வருவிகளையுடைய வேய் முற்றி முத்துதிரும்வெற்பனே! அது நாய்பெற்ற தெங்கம்பழத்தோடொக்குமென்றவாறு.

(குறிப்பு) இது, நன்றியில்செல்வத்தின் இழிவுகூறுகிறது. பிறர்க்குக் கொடுத்தலாவது அறப்பொருட்டாகவும் பொருட்பொருட்டாகவும் பிறர்க்குக்கொடுத்தல். தானுகர்தலாவது ஐம்புலவின்பங்களு மாரத்துய்த்தல். தேற்றாதான் எனக் காரியம் காரணமாயுபசரிக்கப்பட்டது. செய்யமாட்டாதான்—செய்யவல்லனல்லாதான். வல்லனாயிற் செய்யாதிரான் என்பது குறிப்பு. 'பெற்ற முழங்குமுரசுடைச்செல்வம்' என்றது துய்த்துவழங்குதற்கேற்றவாறு கைவசப்பட்டிருக்கும்

செல்வமிகுதியைக் காட்டியபடி. நாய்பெற்ற தெங்கம்பழத்தோடொக்கு மென்றது நாய்க்கு ஒரு தேங்காய்மூடிகிடைத்தால் அதைப் பிறிதோன் முற்கும் கொடாது, ஒடுநீங்க உடைத்துண்ணுமாற்றலின்மையாற் றானும் நுகரமாட்டாது அபிமானித்து அதைக் கவ்விக்கிடப்பினும் அந்நாய்க்கு அது தக்காதொழிவதுபோல, வழங்கலுந்துய்த்தலு மில்லாதான்பெற்ற முழங்குமுரசுடைச்செல்வத்தை அவ னபிமானித்திருப்பினும் அவற் கது தக்காதொழியுமென்றவாறு. "காயே பழமே"* என்றதனால், தெங்கம் பழம் எனப்பட்டது. "காய்மாண்டதெங்கின்பழ"† மென்றார் பிறரும். "நாய்க்குத் தேங்காய் தக்குமா" என்பது இதன் பழமொழி. தக்கல்—உடையோனுக்குரியதாகி நிலைபெறல்.

152. ஆவிற் கரும்பனி தாங்கிய மாலையுங்
கோவிற்குக் கோவல னென்றுலகங் கூறுமாற்
றேவர்க்கு மக்கட் கெனல்வேண்டா தீங்குரைக்கு
நாவிற்கு நல்குர வில்.

எ-து, ஆநிரைக்குவந்த வருந்துயரைக்கெடுத்த திருமாலையும் பசுநிரைக் கே தக்க இடையனென் றுலகத்தார்கூறுநிற்பர்; ஆதலாற் றேவர்க்குரைக்கு முறையிது; மக்கட்குரைக்குமுறையிது என்று வேறுபடுக்கவேண்டுவதில்லை; ஒருவரைத் தீங்குரைக்குமிடத்து நாவிற்கு நல்குரவில்லையென்றவாறு.

(குறிப்பு) இது, இழிவுரைதருவதாயிருப்பினும் தம் குலத்தொழில் தவிர்தலாகாதென்கிறது. ஆ—எல்லா ஆக்கங்களுக்குங் காரணமாகிய பசு. ஆக்கம்—இம்மைக்குப் பொருளும் போகமும், மறுமைக்குப் புண்ணியமும். வந்த அருந்துயர்—தேவராஜகோபத்தால் வந்த கன்மாரியின்றுக்குதலானகிய தீர்த்தற்கரியதுயர். தாங்கியமால்—அவ்வாநிரை மேற் றுக்காது மலையைக் குடையாகப்பிடித்துத் தன்மேலதாம்படி தாங்கிய உயர்வறவுயர்ந்தபெரியோனாகிய திருமால். பசுநிரைக்கேதக்க இடையன் என்று என்றது பிறிதொருசெயலுக்குந் தகுதியின்றிப் பசுநிரை மேய்ப்பதற்கேயுரிய இடையர்குலத்தவன் என்றபொருள்படக் கோபாலன் கோவிந்தன் என்று என்றவாறு. உலகத்தார்கூறுநிற்பர் என்றது உயர்ந்தோரு மிழிந்தோருமாகிய உலகத்துள்ளோரெல்லாருங் கூறுநிற்பர்

* தொல்-பொருள். மரபியல்; சூத்திரம் ௮௯.

† சிந்தாமணி-காமகளிலம்பகம், செய்-2.

என்றவாறு. இடையன் என இழிவுரைபயப்பதாயிருப்பினும் ஆநிரை மேய்த்தலாகிய தனது குலத்தொழிலைத் திருமாலும்புரிந்தமையால் அவரவர் சாதிதர்மமாகிய தொழிலை இழிவுரைக்கஞ்சிக் கைவிடலாகாதென்பது கருத்து. தேவர்க்குரைக்கு முறையிது மக்கட்குரைக்குமுறையிதுவென்று வேறுபடுக்கவேண்டுவதில்லை என்றது குணமே யொருங்குடையாரும் குற்றமே யொருங்குடையாரும் உலகத்தின்மையால் உயர்ந்தோர்க்குப் புகழ்ந்துரையொன்றேயுள்ளது, இழிந்தோர்க்கு இகழ்ந்துரையொன்றே யுள்ளது, என வரையறுக்கு நியதியில்லையென்றவாறு. ஒருவரைத் தீங்குரைக்குமிடத்து நாவிற்குநல்குரவில்லை என்றது யாராயிருப்பினும் ஒருவரைத் தீங்குரைக்கக்கருதினால் ஒருதீங்குமில்லாதாருலகத்தின்மையால் அவர்க்குள்ள தீங்கை யெடுத்துரைக்குநாவிற்கு அவர்பாலுள்ள தீங்குகளை யுரைத்தவல்ல சொற்செல்வம் மிகவும் உள்ளது என்றவாறு. எல்லாக்குலத்தொழிலுக்கும் ஒருவாற்றான் இழிவுரைத்தற்கும் இடமுண்டென்பது கருத்து. இதன பழமொழி "நாக்குக்கு நிரப்பில்லை" என்றிருந்து அது இக்காலத்து 'நாக்குக்கு நரம்பில்லை' எனச் சிதைந்ததுபோலும்.

153. பூந்தண் புனற்புகார்ப் பூமிகுறி காண்டற்கு
வேந்தன் வினவினன் மாந்தரைச்—சான்றவன்
கொண்டதனை நாணி யுரைத்தலாற் றன்கண்ணிற்
கண்டதூஉ மெண்ணிச் சொலல்.

எ-து, பூந்தண்புனலினையுடைய புகாரின்கணுள்ள விளைநிலத்தை யின்னதுணையென்றறிதற் கங்குவாழுமாந்தரை வேந்தன்வினவினவிடத்து மற்றொருவன் களவினாலெண்வெருவின்றநிலத்தையறிந் தந்நிலத்தைநீக்கிக்கரந் தித்துணை நிலமுள்ளதென் றொருசான்றவனரசற்குச்சொல்லி யந்நிலங்கரந்தாள்கின்றவனைப் பிழைப்பித்தானுதலாற் றன்கண்ணாற்கண்டு தெளியவறிந்ததனையுஞ் சொல்லலாஞ் சொல்லலாகாதென் றாராய்ந்து சொல்லுகவென்றவாறு.

(குறிப்பு) இது, உண்மையேயாயினும் தீங்குபயப்பதனைச்சொல்லற்கவென்கிறது. புகாரிக்கணுள்ள-புகார்நகரைச்சார்ந்துள்ள. வினவினவிடத்து-ஒருத்தனைசெய்புண்டென்று வினவியவிடத்து. சொல்லலாம், சொல்லலாகாது என்றாராய்தலாவது நன்மைபயக்குமென்று தோன்றுவதைக்கொண்டு சொல்லலாமென்றும், தீமைபயக்குமென்று தோன்றுவதைக்கொண்டு சொல்லலாகாதென்றும் தெளிதல். 'பூந்தண்புனற்

புகார்.......மறைத்தலால்' என்றது தீமைபயக்குஞ்செய்தியைச் சொல்ல லாகாதென்பதற்குச் சிஷ்டாசாரமாகிய திட்டாந்தங் காட்டியவாறு. இங்கு ஒருவன் கரந்தாள்கின்றதில மித்துணையெனச் சான்றவனறிந்து கொண்டானாயினும் அதனைக் காட்டிக்கொடுத்தாற் கரந்தாள்கின்றவனுக்கு உயிர்க்கிறுதியாகிய தீமையுண்டாகுமென்று மறைத்தமையாலிது பொய்ம்மையாகாது வாய்மையாயிற்று. "வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்-தீமை யிலாத சொலல்" "பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த-நன்மை பயக்கு மெனின்"* எனபன பொய்யாமொழி. "கண்ணிற்கண்டதானுலு மெண்ணிச்சொல்லவேண்டும்" என்ப திதன் பழமொழி. கண்ணிற்கண்டதானுலுமென்றது உண்மையென்று நன்குணரப்பட்டிருப்பினு மென்றபடி. எண்ணிச் சொல்ல வேண்டுமென்றது இதைச்சொல்வதனுல் விளைவது நன்மையா? தீமையா? என்றாராய்ந்து நன்மைவிளையுமென்று தெரிந்தால் அதனைச் சொல்லலாம்; தீமைவிளையுமென்றுதெரிந்தால் அதனைச் சொல்லலாகாதென்றவாறு.

154. இஞ்சி யடைத்துவைத் தேமாந் திருப்பினு
மஞ்சி யகப்படுவ ராற்றுதா—ரஞ்சி
யிருள்புக் கிருப்பினு மெய்யே வெரூஉம்பு
ளிருளி னிருந்தும் வெளி.

எ-து, மதிலினையடைத்துவைத் தானுடையேமென்றிருப்பினும் பகைவர்க்காற்றமாட்டாதா ரஞ்சி யகப்படுவர்; இரவின்க ணிருளிலேயிருந்ததாயினுந் தன்னச்சத்தாலே வெளியின்கணிருந்தாற்போலக் கூகை காக்கைக் கஞ்சு மென்றவாறு.

(குறிப்பு) இது, ஆற்றுதழிந்தார்க்கு அரணில்லை என்கிறது. பகைவர்க்கு ஆற்றமாட்டாதார் என்றது முன்பு ஒருகாற் பகைவரொடு பொருது ஆற்றமாட்டாதழிந்துபோந்தவர் என்றவாறு. அகப்படுவர் என்றது முன்பு தாம் ஆற்றுதழிந்த அச்சத்தால் அப்பகைவரை எதிர்த்தடர்க்குமாற்றலின்றி யவர்க்ககப்படுவர் என்றவாறு. "அச்சமுடையார்க்கரணில்லை" என்பது குறள்†. இரவின்கண் இருளிலேயிருந்த

* திருக்குறள். 30-ஆம் அதிகாரம், வாய்மை 1, 2.

† திருக்குறள்-டுச-ஆம் அதிகாரம், பொச்சாவாமை ச.

தாயினும் என்பதற்குக் காக்கை இரவின்கண், கூகைக்கு உண்மையாகவே அஞ்சி இருளிலே மறைந்திருந்தாயினும் என்பது கருத்தாகக்கொள்க. இது 'அஞ்ச மெய்ப்பெ யிருள்புக்கிருப்பினும்' என்றதன் கண்ணழிப்பு. அஞ்சி யிருள்புக்கிருப்பினும் என்ற குறிப்பாற் காக்கை என்னும் எழுவாய் வருவிக்கத்தக்கது. இதனாற் பகைவலிகுறைதற்கும் தன்வலிமிகுதற்கும் சாதகமானகாலத்திலும் என்பது குறிக்கப்பட்டது. 'வெரூஉம் புள் இருளினிருந்தும் வெளி' யென்பதற்கு, முன் பகற்காலத்திற் காக்கையாற்குத்துண்டு வெருவாநிற்கும் கூகை, தனக்கேயரணான இருளிலே யிருந்ததாயினும் தன் எச்சத்தாலே தன்பகைக்கேயரணான வெளியின்கணிருந்தாற்போலக் காக்கைக்கு அஞ்சும் எனப் பொருள்விரித்துரைத்துக்கொள்க. இது எடுத்துக்காட்டுவமை. 'வெருளுங்கூகை யிருளிலுமஞ்சும்' என்பதிதன் பழமொழி. "பகல்வெல்லுங் கூகையைக் காக்கை"* 'அற்காக்கை கூகையைக்கண் டஞ்சினவா மெனவகன்றார்'† என்பன முன் குத்துண்ணாதகூகையுங் காகமுங் கூடியவழியும், இப்பழமொழியிற்கூறியது முன் குத்துண்ட கூகையுங் காகமுங் கூடியவழியுமாகிய வழிவேறுபாடுண்மையால் மாறுபாடின்மை யறிக.

155. ஆற்ற வினைசெய்தார் நிற்பப் பலவுரைத்
தாற்றாதார் வேந்தனை யோவது—சேற்றுள்
வழாஅமைக் காத்தோம்பி வாங்கு மெருதுநாங்
கெழாஅமைச் சாக்கா டெழல்.

எ-து, போரின்க ணாற்றவல்லராய் வினைசெய்தார்நிற்பப் போரின்கட்புக் கொருவினைசெய்யமாட்டாதார் வேந்தனைப் பலவுரைத் தொருசிறப்புச்செய் யிலனென்றுநோவது, சேற்றின்கண் வழுவி யழுந்தாமைகாத்துப் போற்றி யிழுக்குமெருது புடைபெயர்த்துசொல்லாமைச் சாக்காடுசென்றதுபோலு மது வென்றவாறு.

(குறிப்பு) இது. வினையாட்சியில்லாதார்க்குப் பரிசில்லை என்றது. இப்பாட்டினுள்ளும், உரையுள்ளும் 'சாக்காடு' என்றிருப்பது 'சாகாடு' என்றிருக்கவேண்டும். சாகாடு-சகடம். ஆற்றவினைசெய்தார்க்குச் சேற்றுள்வழாஅமைக்காத்தோம்பிவாங்குமெருதும், ஆற்றாதார்க்குச்

* திருக்குறள் சஉ-ஆம் அதிகாரம், காலமறிதல் க.

† கம்பராமாயணம், பாலகாண்டம், கார்முகப்படலம் செய்-23.

சாகாடும் உவமங்களாம். எருது புடைபெயர்ந்து செல்லாமை என்றது சகடிழுத்த எருது பரிசவேண்டிச்செல்லாதிருக்க என்றவாறு. சாகாடு சென்றதுபோலும் என்றது 'சகடம் தனியே பரிசுவேண்டியெழுந்து செல்வதுபோலும் என்றவாறு. கழுத்துநோவ இழுத்த வெருதிருக்கச் சகடு தனியே பரிசுக்கெழுவது அயுக்தமும் அசம்பாவிதமு மாவது போல வினைமாட்சியி னாற்றுவார் வாளாவிருக்க ஆற்றுதார் பரிசுக்கெழுவது அயுக்தமு மசம்பாவிதமுமா தலா லவர்க்கு அது அளிக்கலாகாதென்பது கருத்து. இதன் பழமொழிவடிவம் வந்தவழிக் கண்டுகொள்க.

156. தன்னலி கிற்பான் றலைவரிற் றனவர்க்குப்
பின்னலி வானைப் பெறல்வேண்டு—மென்னதூஉம்
வாய்முன்ன தாக வலிப்பினும் போகாதே
நாய்முன்ன தாகத் தகர்.

எ-து, தன்னைநலியவல்லான் றன்மேற் படையெழுவனுயி லவற்குப் பின்னர்நின்று நலிவானைத் தா னமைத்துளனுதல்வேண்டும்; வாய்முன்னதாம்படி பிணித்திர்ப்பினுந் தகர் தன்முன்னே நாய்வர யாதும் போகாதாதலா னென்றவாறு.

(குறிப்பு) இது, வலியோரைச் சார்ந்திருக்கவேண்டுமென்கிறது. "வாய்முன்னதாகவலிப்பினும்போகாதே, நாய்முன்னதாகத்தகர்" என்றது செய்புள்வடிவாயமைந்த பழமொழி. இதில் நாய் அணிகருதாது நின்ற திட்டாந்தமானமையால் ஈநோபமையாகாதென் அறிக. நாய்முன்னதாகத் தகர் எதிர்த்துப்போகாதவாறுபோலப் பின்னலிகிற்பான்முன்னர்த் தன்னலிகிற்பான் படைத்துப்போகான் எனப் பொருளொடுபொருத்தியுரைத்துக்கொள்க. பின்னர்நின்றுநலிவானைத் தானமைத்துளனுகை யாவது, தன்பின்னர்நின்று தன்பகையைநலியவல்லவலியானைத் தனக்குரியனுயமைத்துக்கொண்டிருத்தல். தகர்-பாட்டுக்கடாய்.

157. வலியாரைக் கண்டக்கால் வாய்வாளா ராகி
மெலியாரை மீதூரு மேன்மை யுடைமை
புலிகலாங் கொள்யானைப் பூங்குன்ற நாட
வலியலாத் தாக்கு வலிது.

எ-து, தம்மில்வலியாரைக்கண்டக்கால் வாயா லொன்றும்பேசாராகித் தம்மின்மெலியாரைக்கண்டா லடர்த்துச்செல்லுமேம்பாடுடைமை, புலியொடுகலாங் கொள்ளும் யானையையுடைய பூங்குன்றநாடனே! வலிதன்றுமக்கலாம் வலிதாயினவாறுபோலு மென்றவாறு.

(குறிப்பு) இது, மெலியாரைமீதூரலாகாதென்கிறது. வலியார்—அறிவு, ஆண்மை பெருமைகளாற் றன்னின்மிக்கார். வாய்வாளராகி என்றதில் வாயும் என்னும் இழிவுசிறப்பும்மையை விரித்து வாயானும் ஒன்றும் பேசாராகி எனப் பொருளுரைத்துக்கொள்க. அடர்த்துச் செல்லுதல்—வலியப்பகைத்து மேற்செல்லுதல். மேம்பாடுடைமை என்றது பிறர்வாக் கருத்தாற்சொல்லும் மேன்மையாகிய செப்பொருளும், கவி கருத்தாற்சொல்லும் இழிதகைமையாகிய குறிப்பும் ஒருங்குணர நின்றது. வலிதன்றுமக்கலாம் வலிதாயினவாறுபோலும் என்றது 'சிறிய கலகம் பெரிய பகையானாற்போலும்' என ஓரிதிகாசமடியாகவந்த பழமொழிப்பொருளைச்சுட்டித் திட்டாந்தங்காட்டியவாறு. அது பிரசித்தி பெற்ற ராமராவணயுத்தகாரணமான ராக்ஷஸாக்கிரமணமென்க. இது மெலியாரை வலிய மேற்சென்றுவருத்தலும், 'மெலியார்மேன்மேகபகை'* என்பது மேற்சென்ற மெலியாரை யெதிர்த்தொறுத்தலுமாகிய வேறுபாடின்மையான் மாறுபாடின்மையறிக. இதன் பழமொழி, 'குட்டிக்கலகம் குடியைக்கெடுக்கும்' என வழங்கப்படுகிறது.

158. மறுமையொன் றுண்டோ மனப்பட்ட வெல்லாம்
பெறுமாறு செய்ம்மினென் பாரே—நறுநெய்யுட்
கட்டி யடையைக் கனிவித்துக் கண்சொரீஇ
யிட்டிகை நீற்று பவர்.

எ-து, 'மறுபிறப்பென்பதொன்றுண்டோ? மனத்தாற்காதலித்தனவற்றை யெல்லா நுகரப்பெறுமாற்றைச் செய்ம்மி' னென்றொருவர்க் குறுதியாகவுணரச் சொல்லுவார், நறுநெய்யட்டோய்ந்த பாகுபெய்தவடையை நுகராமற்காத்துக் கண்ணினீர்சொரிவித் தொருவனை யிட்டிகையைத் தீற்றுவிக்குமதனோ டொக்குமென்றவாறு.

(குறிப்பு) இது, சிற்றினத்தார்பேச்சுக்குச் செவிகொடுக்கலாகா தென்கிறது. மறுபிறப்பென்பதொன் றுண்டோ வென்றது இம்மையில் விதிவழியொழுகுவார் மறுமையிற் றேவராய்ப்பிறந் தின்புறுவர் என்னும் ஆஸ்திகவாதத்தை கம்பற்க; அவ்வின்பநுகர்தற்கிடனாகக் கூறும் மறுமையென்பதேயில்லையே என ஆச்சிரயாசித்தியாற் பாமத நிரசனங்காட்டியவாறு. உண்டோ என்னும் ஓகாரம் எதிர்மறைப்பொருளில்வந்தது. மனத்தாற் காதலித்தனவற்றையெல்லாம் நுகரப்பெறுத

* திருக்குறள் ௮௭-ஆம் அதிகாரம், பகைமாட்சி ௧.

லாவது—விதிவிலக்குகளுக் கடங்காது சுவேச்சாசாரிகளாய் விலங்கினம் போல வேண்டியபடி யனுபவிக்கப்பெறுதல். இங்குப் பெறுதல் சித்த மில்லாத சாத்தியக்குறிப்புணாநின்றது. ஆறு—உபாயம்; அது பிரமாண சாஸ்திரங்களேயும், பிராமாணிகர்களேயும் தலையெடுக்கவொட்டாமல் வேண் டியன புரிதலும் சாருவாகங்கற்பித்தலும் முதலியன. செய்ம்மின் என் றது பிரமாணசாஸ்திரங்களாலும் பிராமாணிகர்களாலும் அறிவிக்கப் பட்ட சிஷ்டாசாரத்தா லிறந்தொழிந்த காமசாரமான ஸ்வேச்சாசாரந் தலையெடுக்குமாறு புத்திபூர்வகமாக முயன்றுசெய்யுங்கள் என விதிக்கிலக் காக்கிச் சிற்றினத்தின் ஸ்வமதஸித்திக்கு உபாயங்கூறியவாறு. என்று சொல்லுவார் எனக் கூட்டுக. உறுதியாக-உறுதிப்பொருளாக. சொல்லுவார் என்றது சொல்லும் சிற்றினத்தார்செய லென்றவாறு. பின் 'தீற்றுபவர்' என்பதற்கும் இஃதொக்கும். நறுநெய்யுட்டோய்த்த பாகுபெய்த அடை— அப்பவகையு ளொன்று; அது சிலேபி என்னும் திசைச்சொல்லால் வழங் கப்படுவது. அடை—அடப்படுவதால் அப்பெயர்பெற்றது. நுகராமற் காத்து என்றது இவ்வடை நன்றுகவேகவில்லையென்று பொய்க்குற்றங் கூறி நுகரவிடாமற் பிடுங்கியெறிந்து தடுத்து என்றவாறு. கண்ணினைச் சொருகுவித்து—கண்ணின் கருவிழியை மேலிமையுட்சொருகி மறைத் துக்கொள்ளப்பண்ணி; குருடராக்கி என்றபடி. கண்விழித்திருப்பின் இட் டிகை தின்னற்கிசையார் என்பது அவர்கருத்து. இதனால் வேதாகமப் பிரமாண சாஸ்திரஞானமுடையாரும் இவர்கூற்றை யுட்கொள்ளற்கு இசையார் என்பது பெறப்படும். இட்டிகை—சுடுமண்கட்டி. தீற்றுதல்— (இது நன்றுகவெந்திருக்கிறதென்று சொல்லித்) தின்பித்தல். ஊட்டுதல் உண்பித்தலாவதுபோலத் தீற்றுதல் தின்பித்தலாயிற்று. ஒருவர் நுகர்ந்துகொண்டிருக்கும் கட்டியடைபோலு மினிமையும் இன்பமும் பயக்கும் விதிவழியொழுக்கமாகிய சிஷ்டாசாரத்தைப் பயனற்றதென்று பழித்து,நேத்திரங்கள்போன்ற வேதாகமப்பிரமாணங்களைமறைப்பித்துக் கொண்டு, சுடுமண்கட்டிபோலும் இன்னாமையும் தீங்கும் பயக்கும் காம சாரவொழுக்கத்தைப் புகட்டவரும் சிற்றினத்தார்கூற்றுக்குச் செவி கொடுக்கலாகாதென்பது கருத்து. பின்னடியிரண்டும் பழமொழிக்கூற்று. அதில் இட்டிகைதீற்றல் என அநிஷ்டோபதேசத்தை யுணர்த்திவந்த குறிப்புமொழியே இங்கெடுத்துக்கொண்ட பழமொழியாயிற்று. அறி வுடையார்க்குக் காமசாரவொழுக்கமே அநிஷ்டமென்பதையும் சிஷ்டாசார

வொழுக்கமே இஷ்டமென்பதையும் இங்கு நிரூபிக்கில் விரியும். வல்லார் வாய்க் கேட்டுணர்க.

159. அறஞ்செய் பவற்கு மறவுழி நோக்கித்
திறந்தெரிந்து செய்தக்காற் செல்வுழி நன்றாம்
புறஞ்செய்பச் செல்வம் பெருகு மறஞ்செய்ய
வல்லவை நீங்கி விடும்.

எ-று, அறத்தைச்செய்பவற்கும் அறத்தைச்செய்யுமிடத்தைப்பார்த்து வேறுபாடுதெரிந்துசெய்தக்காற் செல்லு மறுமையுலகத்தின்கண் மிகவு நன்றாம்; செல்வத்துக்குவேண்டுவனசெய்யச் செல்வம்பெருகும், அதுபோல வறத்தைச்செய்யப் பாவங்கணீங்கு மாதலா னென்றவாறு.

(குறிப்பு) இது, அறஞ்செய்வார் இடனுந் திறனு மறிந்து செய்க வென்கிறது. அறத்தைச்செய்யுமிடத்தைப் பார்த்தலாவது தேச கால பாத்திர விஷய முதலியவற்றாற் றகுதியுடையதென வறிதல். வேறுபாடு தெரிதலாவது இதனினு மிது மிக்கது என அறத்தின் றாரதம்மியமறிதல். மிகவு நன்றா மென்றது இவ்வாறறியாதுசெய்யும் அறத்தின் பயனான இன்பத்தினும் மிக்கவின்ப மளிக்கு மென்றவாறு. புறஞ்செய்கையாவது இடையூறுபோக்கிப் பொருள்தேடலும், தேடியபொருளைப் பாதுகாத்தலு முதலியனவாதலா லவையெல்லாமடங்கச் செல்வத்துக்கு வேண்டுவனசெய்ய வெனப் பொருளுரைக்கப்பட்டது. அதுபோல என்றது ஒப்பலொப்பான்வந்த எடுத்துக்காட்டுவமச்சொல். அறஞ்செய்ய வல்லவைநீங்கிவிடுமென்பது பழமொழிக்கூற்று. இது 'அறம்வளரப் பாவந்தேயும்' எனக் கிலவழக்கான்வந்த பழமொழிப்பொருளை யுடையது. இப்பழமொழி 'ஒழுக்கத்துநீத்தார்'*என்னுங் குறளுரையி லுரைநடையா வெடுத்தாளப்பட்டது.

160, வருவாய் சிறிதெனினும் வைகலு மீண்டிற்
பெருவாய்த்தா நிற்கும் பெரிது—மொருவா
றொளியீண்டி நின்று முலகம் விளக்கு
துளியீண்டில் வெள்ளந் தரும்.

எ-து, ஒருவர்க்குப் பொருள்வருவாய் சிறிதாயினு நாடோறுந் துஞ்சாமற் சிறிதாயினு மீண்டிற் பெரியவளவினையுடைத்தாய்ப் பெரிதுநிற்குஞ்செல்வமுள

* க-ம் அதி, நீத்தார்பெருமை, க. பரிமேலழகருரை,

தாம்; ஒருபடியே பலமீன்களு மீண்டி வெளிப்பட்டுநின்று லுலகமெல்லா மிரு ணீங்க விளக்கும்; மழைபெய்யுந்துளிகளும் விடாதேநின்றீண்டிற் கடல்போலு நீரையுந் தருமாதலா னென்றவாறு.

(குறிப்பு) இது, பொருள்கூட்டுமாறு கூறுகிறது. பொருள்வரு வாய்—பொருள்வருவதற்குரியவாயில்கள். அவை வாணிகம், உழவு, வினை யாட்சி, படுபொருள்தொகுத்தல் முதலியன; பயனின்சிறுமை பயக் கும் வாயிலின்மே னின்றது. துஞ்சாமல்—இடையறாமல். ஈண்டில்—கூடில். பெரிதுநிற்றல்—நீடித்துநிற்றல். செல்வமுளதாம் என்றது சொல்லெச்சம். ஒருபடியேவிளக்கும் எனக் கூட்டுக. ஒளி ஆகுபெய ராய் வான்மீனினங்களை யுணர்த்திற்று. பின்னடியிரண்டும் செய்யுள்வடி வாக இரண்டடுக்கிவந்ததொரு பழமொழி. அதன் ஒருபகுதி 'பலதுளி பெருவெள்ளம்' என வழங்கப்படுகிறது. ஒளியீண்டிநின்றுலுலகம் விளக்கும் என்றதில் ஈட்டம் ஒருவடிவாகக் கூடலும். 'பன்மீனும்காய்க லாவாதுநிலா'* என்பத னீட்டம் பலவடிவாகிநிற்றலுமாகிய வேறுபா டுண்மையா னிவைதம்முண் மாறுபாடின்மை யறிக.

161. இனியாரு மில்லாதா ரெம்மிற் பிறர்யார்
தனியேம்யா மென்றொருவர் தாமடியல் வேண்டா
முனிவில ராகி முயல்க முனிவில்லார்
முன்னிய தெய்தாமை யில்.

எ-து, இப்பொழுது பற்றாக வொருவரையுமில்லாதா ரெம்மைப்போற் பிறர்யாவர், யாம் தனியேமாயினே மென் றொருவர் நினைத்து முயற்சிதவிர வேண்டா; வெறுப்பிலராய் மடியாதே கருமஞ்செய்யவே முயல்க; மனத்தின் வெறுப்பில்லாதார் தாம்நினைத்தது பெறுதொழிதலில்லையாதலா னென்றவாறு.

(குறிப்பு) இது, விடாமுயற்சியால் வேண்டியதடையலாமென் கிறது. இப்பொழுது என்றது முயற்சியின்றி மடிந்திருப்பான் மடிந் திருக்குங்காலத்தைச் சுட்டிநின்றது. பற்று—சார்பு. வெறுப்பிலராய் என்றது முயற்சியில் விருப்புடையாகி என்றபடி. மடியாதே—சோம்பா மல். கருமம்—தாம்வேண்டிய பயன்பயக்கும் தொழில். நினைத்தது—விரும்பியது. பெறுதொழிதலில்லையென்றது பெறுதல் ஒருதலையா யுள்ளதென்றவாறு. இப்பொருள் "மடியிலா மன்னவ னெய்து மடி

---

* இந்நூலின் 47-ம் செய்யுள்.

யளந்தான்—ரூஅய தெல்லா மொருங்கு" என மூப்பாலுட்* சொல்லப்பட்டது. இதன் பழமொழிவடிவம் வந்தவழிக் கண்டுகொள்க.

162. கூஉய்க் கொடுப்பதொன் றில்லெனினுஞ் சார்ந்தார்க்குத்
தூஉய்ப் பயின்றாரே துன்பந் துடைக்கிற்பார்
வாய்ப்பத்தான் வாடியக் கண்ணும் பெருங்குதிரை
யாப்புள்வே றாகி விடும்.

எ-து, பிறரையழைத்துக் கொடுப்பதொருபொருள் தமக்கில்லையாயினுந் தம்மை யடைந்தார்க்குப் பொருளைத்தூவிப் பயின்றுவந்தாரே பிறர்துன்பந் துடைக்கவல்லார்; வாய்ப்பத் தான்வாடியவிடத்துஞ் சிறப்புடையகுதிரை பண்ணிட்டுவிசித்தவிடத்து வாடாக்குதிரைபோல வேறாய் வினைக்குரித்தாம்; அதுபோல வென்றவாறு.

(குறிப்பு) இது, உதாரகுணமுடையாரே பிறர்துன்ப மொழிக்க வல்லார் என்கிறது. ஒருபொருள் தமக்கில்லையாயினும் பிறர்துன்பந் துடைக்கவல்லார் எனக் கூட்டுக. தம்மையடைந்தார்க்கு என்றது தாம் பொருளுடையராகியஞான்று தம்மையடைந்தார்க்கு என்றவாறு. தூவுதல்-நொய்தெனநினைந் தள்ளியிடுதல். வல்லார் என்றது வல்லவராவர் எனப் பயனிலையாயிற்று. வாடியவிடத்தும்—வயிற்றுக்கிரையின்றி மிக மெலிந்திருந்தாலும். சிறப்புடைய குதிரை—பெரும்பிறப்புடைய ஆடல் நடைபயின்ற குதிரை. பண்ணிட்டுவிசித்தல்—சேணம்வைத்துக் கட்டுதல். வேறாய்—வீறுடையதாகி. வினைக்கு—போர்க்களத்துய்த்தற்கு. ஆடன்மாவாகிய பெரும்பிறப்புடைய குதிரை வாட்டமுற்றவிடத்தும் போரிடைச்செலுத்தில் வீறுடையதாகிச் சென்றுதவுதல்போல உதாரகுணமுடையோர் வறுமையுற்றவிடத்தும் உற்றோர்க் குறுதுயர் தீர்ப்பர் என்பது கருத்து. இதன் பழமொழிவடிவமும் வந்தவழிக் கண்டுகொள்க.

163. தோற்றம் பெரிய நசையினை ரக்நசை
யாற்ற தவரை யடைந்தொழுகல்—யாற்றின்
கயல்புரை யுண்கட் கனங்குழா யஃதா
லுயவுநெய் யுட்குளிக்கு மாறு.

* 61-ம் அதி. மடியின்மை-௧0.

எ-து, தோற்றத்தாற்பெரியவாசையையுடையா ரவ்வாசையைத்தீர்க்க வாற்றாதவரையடைந்துவாழ்தல், யாற்றின்கட் கயலையொவ்வாகின்றவுண்கட் கனங்குழாய்! தேருருட்கு நடத்தற்கிடு முயவுநெய்யின்க ணொருவன்குளிக்கு மதனோடொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இது, ஒருகுறை தீரவிரும்புவோர் அது தீர்ப்பாரைத் தெரிந் தடையவேண்டு மென்கிறது. 'தோற்றத்தாற் பெரிய' என்றது ஆசையின் இயல்புகூறியவாறு. 'ஆராவியற்கையவா'* என்றார் பிறரும். "அந்நசை யாற்றாதவர்" என்பது 'நோய்நோக்கொன் றந்நோய் மருந்து"† என்பதுபோல உருபு தொக்குநின்றமையால் அவ்வாசையைத் தீர்க்க வாற்றாதவரெனப் பொருளுரைக்கப்பட்டது. அவரையடைந்து வாழ்த லாவது—அவர்தீர்ப்பரெனநம்பி அவரைப் பின்பற்றிக்கொண்டிருத்தல். ஒழுகல் அஃது எனக் கூட்டி, ஒழுகல் யாதொன்றுண்டு அஃது எனச் சுட்டுடனியையும் வினை வருவித் துரைத்துக்கொள்க. உயவுநெய்—தேருருளின் றுளைக்கும் அச்சுக்கு மிடையே அவை தேயாது சிக்காது எளிதினுருளுமாறு கற்றாழஞ்சருகு முதலியன சுட்ட கரித்தூள் கலந் திடும் ஆமணக்கெண்ணெய். இது 'மசகு' என இக்காலத்து வழங்கப்படு கிறது. உடலழுக்குப்போக்கவிரும்பு மொருவன் அவ்வழுக்குப் போக்க வல்ல நன்னீரிற் குளித்துப் போக்காது அதனைப் போக்கமாட்டாத உயவுநெய்யுட்குளித்தலால் அந்நெய்யுட்கலந்த கரிக்கசடும் உடம்பிற் பற்ற அது நீரானும் போக்கப்படாதவாறுபோலத் தன்குறைதீரவிரும்பு மொருவன் அது தீர்க்கவல்ல நன்னீர்மையுடையாரை நாடித் தீர்த்துக் கொள்ளாது அது தீர்க்கமாட்டாத இழிகுணமுடையாரை யொட்டி யொழுகின் அவரதுநேயத்தா லவர்க்குள்ள குறையுஞ் சேரப் பெருங் குறையாமாதலாற் பின்பு தன்குறைதீர்க்கவல்லராயிருந்த நன்னீர்மை யுடையோரானுந் தீர்க்கப்படாதெனப் பொருளை விரித்துரைத்துக் கொள்க. இதன் பழமொழிவடிவம் வந்தவழிக் கண்டுகொள்க. இது பொருளொப்புமைபற்றிக்"குளிக்கப்போய்ச் சேற்றைப்பூசிக்கொண்டாற் போலும்" என வழங்கப்படுகிறது.

* திருக்குறள் 37-ம் அதி அவாவறுத்தல்-௧0.
† ஷெ 110-ம் அதி. குறிப்பறிதல்-௧.

164. செறலிற் கொலைபுரிந்து சேணுவப்ப ராகி
யறிவி னருள்புரிந்து செல்லார்—பிறிதி
னுயிர்செகுத் தூன்றுய்த் தொழுகுத லோம்பார்
தயிர்சிதைத்து மற்றொன் றடல்.

எ-து, செற்றங்கொண்டாரைப்போலக் கொலையைவிரும்பித் தமக்கு மறுமையின்கண்ணே தா மேற் சேய்த்தாநின்ற வின்பத்தைப்பெற வுவப்பராகித் தம் மறிவினாற் பிறர்க் கருளைச்செய்து விரும்பிச்செல்லாராய்ப் பிறிதொன்றி னுடையவுயிரைமறுமைக்குநன்மைக்குக்காரணமாமென்றதனைக்கொன் றூனினை நுகர்ந்து நல்லாராயொழுகுதல், பாதுகாவாதே தான் சோற்றுக்குக்கறியாகியதயிரைச்சிதைத்து மற்றொருகறியாக வடுதலோடொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இது, "நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்-கொன்றாகு மாக்கங் கடை"என்கிறது. 'செறல் என்னும் அஃறிணைச்சொல் இங்குச் செறற்சொல்லாய்ச் செற்றங்கொண்டார்மேல் நின்றது. இன்னுருபு ஒப்புப்பொருளில்வந்தது. தாம் பெறவுவப்பராகி யெனக் கூட்டுக. சேண் என்றது ஆகுபெயராய்ச் சேய்த்தாநின்ற துறக்க வின்பத்தையுணர்த்திற்று. மேற் சேய்த்தாநின்ற வென்றது இம்மையின் அணித்தா யொருபயனுமில்லையென்பது குறிப்பு. தம்மறிவினால் என்றது அருள்செய்தற்குரியகருவியி னெளிமைகூறியவாறு. இதனாற் கொலைசெய்தற்குரிய சாதனங்களின்வலிமையும் இடர்ப்பாடும் குறித்துணரப்படும். பிறர்க்கு என அஃறிணையுயிருமடங்கச் சிறப்புப்பற்றி உயர்திணைச்சொல்லால் வழங்கப்பட்டது. விரும்பிச்செல்லாராய் என்றது அவ்வருளறத்தினை விரும்பியொழுகாமல் என்றவாறு. பிறிதொன்றினுடையவுயிர் என்றது இராகுவின்றலை என்பதுபோ லொற்றுமைப்பொருளில் வந்தது; பிறிதோருயிர் என்பது பொருள். உயிர் என்றது உயிருடன் கூடியவுடலை யெனக் கொள்க. மறுமைக்கு என்றது வேற்றுமைமயக்கம்; மறுமையின்கண் என்றபடி. நன்மை-இன்பம். கொன்றூனினைநுகர்ந்து என்றது கொல்லலும், ஊனுகர்தலுமாகிய இரண்டு தீவினைகளைப்புரிந்து என்றபடி. நல்லாராயொழுகுதல் என்றது அத் தீவினைபுரிந்தமை காரணமாகத் தீயரெனப்படாது வேள்விபுரிந்தமையே காரணமாக முன்புள்ள தீமையுந் தீர்ந்து நல்லாயினாரென் றுலகம் சொல்லுமாறொழுகினும் அவ்வொழுக்கம் என்றவாறு. இது எழுவாய். பாதுகாவாதே சிதைத்து எனக் கூட்டுக. தான் என்றது பிறிதொரு

சார்பினைவேண்டாது தனியே என்னும் பொருளுணர நின்றது. தான் கறியாகிய எனக் கூட்டுக. கறி-சோற்றுடனுண்ணும் உபாகாரம். தயிர் சிதைத்து என்றது தயிரின்வடிவழித்து மோராக்கிக்கொண்டு என்றவாறு. மற்றொருகறி-மோர்க்குழம்பு. தயிரடலாகா தென்னும் விதி கடந்து அதனையட்டுப் பிறிதொருகறியாக்கியுண்ணு மொழுக்கத்தினும் அவ்விதிகடவாது அதனையிருந்தபடியே யருந்து மொழுக்கம் சிறந்த தானாற்போல, உயிரடலாகாதென்னும் விதிகடந்து அருள்சிதைய வேள்வியி லுயிர்செகுத்துண்ணுமொழுக்கத்தினும் அவ்விதிகடவாது உயிர்களிடத் துள்ளபடி யருளுடையரா யுயிர்சிதையா தொழுகுமொழுக்கமே துறந்தார்க்குச் சிறந்ததெனப் பொருளொடு பொருத்தியுரைத்துக் கொள்க. இதன் பழமொழிவடிவம் வந்தவழிக்கண்டுகொள்க.

165. மறுமனத்த னல்லாத மாநலத்த வேந்த
னுறுமனத்த னாகி யொழுகிற்—செறுமனத்தார்
பாயிரங் கூறிப் படைதொக்கா லென்செய்ப
வாயிரங் காக்கைக்கோர் கல்.

எ-து, குற்றமுடையமனத்தானல்லாத பெரியநலத்தினையுடைய வேந்தனெல்லார்மேலு மன்புற்றமனத்தானாகி யொழுகுவனாயிற் செறுமனத்தையுடைய பகைவர் வீரத்துக்குவேண்டு முகவுரைகள்சொல்லித் தம் படையைத்திரட்டினு லவ்வேந்தனை யென்செய்யவல்லர்; ஆயிரங்காக்கைக் கொருகல்லேறுபோல நிற்கு மவ்வரசென்றவாறு.

(குறிப்பு) இது, அரசர் தமரிடத்து அன்புடைமையாற் பகைவரைவெல்லும்வலியுடையராவர் என்கிறது. குற்றம்-"தேர்ந்து கண்ணோடாது தீவினையு மஞ்சலராய்ச் சேர்ந்தாரையெல்லாம் சிறிதுரைத்" தன் முதலிய வெருவந்தனபுரிதல். 'மாநலத்த' என்றது இங்கு எதிர்காலக் குறிப்புப்பெயரெச்சவினையாய்நின்றது; ஆதலால் பெரியநலத்தினையுடையவேந்தன் என்றதற்கு, பெரியநலமாகிய வெற்றியையுடைய விரும்பு மரசன் என்பது கருத்தாகக்கொள்க. எல்லார்மேலும் என்றது வினைசெய்வோரும், சுற்றத்தாரும், குடிகளும், தற்சார்ந்தோரு முதலிய தமர்களெல்லாரிடத்தும் என்றபடி. கல்லேறுபோலநிற்கும் என்றது கல்லெறிபோல ஓட்டாநிற்கும் என்றவாறு. 'கல்லேறு' என்றுராயினும் எறிகல் என்பது கருத்தாகக்கொள்க; இதன்பழமொழி "காகு

மானவைகோடி கூடிநின்றுலுமோரு கல்லின்முன் னேதிர்நிற்குமோ" எனத் தாயுமானவர்பாடலில்* எடுத்தாளப்பட்டது.

166. தோற்றத்தாற் பொல்லார் துணையில்லார் நல்கூர்ந்தார்
மாற்றத்தாற் செற்று ரெனவலிய ரட்டக்கா
லாற்று தவாழுத கண்ணீ ரவையவர்க்குக்
கூற்றமாய் வீழ்ந்து விடும்.

எ-து, பிறந்தகுடியாற் பொலிவில்லார் தமக்கொருதுணையில்லார் தாம் வறியார் தாஞ்சொல்லுமாற்றங்களாற் றமக்குப் பகைவரென்றுகருதி யவரின் வலியா ரவரை நலிந்தக்கா லந்நலிவினை யாற்றமாட்டாது மற் றவாழுதகண்ணீரா கிய வவை யந்நலிந்தார்க்குக் கூற்றமாய்விழு மென்றவாறு.

(குறிப்பு) இது, எளியாரை நலியலாகாதென்கிறது. பிறந்தகுடி யாற்பொலிவில்லார்-இழிகுலத்தினர். துணையில்லார்-ஆதாவற்றவர். வறி யார்-பொருளில்லாத எளியவர். தாம்சொல்லும் மாற்றங்களாவன-வலி யார்க்கு எளியார் பணிந்துபேசும் மரபறியாது மக்களாதல் ஒப்புமையாற் றம்மோ டவரையொப்பித்து எதிர்த்துப்பேசும் மறுமொழிகள். நலிதல்-வருந்தச்செய்தல். கூற்றம்—உயிர்வேறு உடல்வேறுகக் கூறுபடுக்கும் காலக்கடவுளும், வாளுமாம். வீழ்ந்துவிடும்-ஒருசொல்; விடு தெளி வுணர்த்திநின்றது. எளியாரை நலியின் அந்நலிவு, நலிந்தார்க்கு நாச காரணமா மென்பது கருத்து. ஆதலா லதுசெய்யலாகா தென்பது குறிப்பு. இதன் பழமொழி'ஏழையழுதகண்ணீர்கூரியவாளோடொக்கும்' என்பதாம். இது, "அல்லற்பட் டாற்று தழுதகண் ணீரன்றே-செல் வத்தைத் தேய்க்கும் படை"எனக் குறளினும்† வழங்கப்பட்டது.

167. உடுக்கை மருந் துறையு ளுண்டியோ டின்ன
கொடுத்துக் குறைதீர்த்த லாற்றி—விடுத்தின்சொ
லியாமை யென்ப வெருமை யெதிர்தொருவர்
காயக்கு லோபிக்கு மாறு.

---

* எங்குநிறைகின்றபொருள். செய்-6.
† 56-ம் அதி. கொடுங்கோன்மை-5.

எ-து, உடுக்கையு மருந்து முறையுமிடமு முணவு மென விப்பெற்றிப்பட்டனவற்றைப் பிறர்க்குக்கொடுத்து மற்றவர்வறுமைதீர்த்தலேவல்லாய்விடுத்துவைத் தினியசொற்களைச் சொல்லாமையென்று சொல்லுவர், தின்னவேண்டியெருமையெறிந்தவர் காயக்கு லோபஞ்செய்யுமாறுபோலு மதுவென்றவாறு.

(குறிப்பு.) இது, பிறர்க்கு ஒன்று உதவுமிடத்து இன்சொல்லோடுதவவேண்டு மென்கிறது. பிறர்—துறந்தோரும் வறிஞரும். ஆற்றிவிடுதல் ஒருசொல். ஆற்றல்—வல்லமை. வல்லாய்விடுத்துவைத்து என்றது வலலாய்விட்டவராயிருந்துகொண்டு என்றபடி; ஆய்விடல் வல்லமையின்றேர்ச்சிப்பேறுணரநின்றது. இனியசொற்களாவன ஏற்போர்மாட்டு விருப்போடுதவும் குறிப்பினை வெளிப்படுத்தி அவரை யுவப்பிக்கும் நல்லுரைகள். சொல்லீயாமை ஒருசொல்; சொல்லாமை என்றபடி. எருமை—எருமைக்கடாவை. எறிந்து—அடித்துக்கொன்று. காயக்கு—கறிசமைக்கச் சம்பாரமிடுதற்குவேண்டும் உள்ளிப்பூடு முதலாயின வுதவுதற்கு. லோபஞ்செய்தல்—பொருட்செலவுசெய்யாமை. ஆறுபோலுமது—ஆறுபோல்வது. இனிய சொற்களைச் சொல்லாமை காயக்கு லோபிக்குமாறுபோல்வதென்று அறிவுடையோர் சொல்லுவர் எனக் கூட்டிமுடித்துக்கொள்க. அரிதிற் பெறுதற்குரிய எருமையிறைச்சி யெய்தப்பெற்றவொருவன எளிதிற்பெறுதற்குரிய காயமிடாதாக்கியவழி அது சுவைகுன்றியொழிவதுபோல அரிதி லுதவுதற்குரிய உடுக்கை மருந்து உறையுள், உண்டிமுதலியவற்றை ஆதுலர்க்கு அளிக்குமொருவன் எளிதிலுதவுதற்குரிய இன்சொல்வழங்காதவழி அவ்வுதவி பயன்குன்றியொழியுமெனப் பொருளொடு பொருத்தி யுரைத்துக்கொள்க, இதன் பழமொழிவடிவம் வந்தவழிக் கண்டுகொள்க.

168. ஓர்த்த கருத்து முணர்வு முணராத
மூர்க்கற் கயதி மொழியற்க—மூர்க்கன்றான்
கொண்டதே கொண்டு விடானருது மாகாதே
யுண்டது நீலம் பிறிது.

எ-து, தானோர்த்தகருத்தினையு முலகொழுக்கத்தினையு மறியாதமூர்க்கனுக்கு மனத்தாலிகழ்ச்சியின்றி யிகழ்ந்ததுபோலநகையாடியுரைக்குமுரையைத் தவிர்க்க, மூர்க்கன் முன்கொண்டதனையேமனத்தின்கட்கொண்டு விடானதலால், நீலநிறத்தை யுண்டதொன்று பிறிதொருநிற மாகாததுபோலு மென்றவாறு.

(குறிப்பு.) இது, மூர்க்கரோடு பரிகாசவார்த்தைபேசலாகா தென்கிறது. தானேர்த்தகருத்து—பேசுவான் ஆராய்ந்து குற்றமின்றிச்சொல் லும் கருத்து. உணர்வு உணர்வானறியப்படு முலகியலுக்கானமையா லாகுபெயராயிற்று. உலகொழுக்கம்—உலகவழக்கம். இவ்விரண்டுமறிதல், அசதியாடலிதுவெனவறிந்து அதனை மனத்துட் கொள்ளாதுவிடுதற்கு ஏதுவாமாதலால் இவையறியாமை கொண்டதேகொண்டுவிடாமைக் கேதுவாயிற்று. மூர்க்கன் பிடிவாதஞ்செய்யுமியல்புடையோன். அயதி—ஹஸதி என்னும் வடமொழிச்சிதைவு. அது நகைத்தல் என்னும் பொருளுடைமையான் ஆகுபெயராக்கி 'மனத்தாலிகழ்ச்சியின்றி யிகழ்ந்ததுபோல நகையாடியுரைக்குமுரையை' எனப் பொருள் விரித்துரைக்கப்பட்டது. மூர்க்கன் றான்கொண்டதனையே மனத்தின்கட்கொண்டு விடானுதலால் என்றது நகையாடியுரைக்குமுரையால் தன்னையிகழ்ந்ததாக மனத்தின்கட்கொண்டதனை மூர்க்கன் ஒருவாற்றானும் விடானுதலா லென்றவாறு. நீலநிறத்தையுண்டது என்றது சாயத்தாற் கருநிறமாக்கப்பட்டதொன்று என்றவாறு. பிறிதொருநிறமாகாது என்றது பிறிதொருசாயத்தாற் செந்நிறமுடையதாக மாறுபடாதென்றவாறு. நீலமுண்டது பிறிதாகாது: அதுபோல் மூர்க்கன் றான்கொண்டதே கொண்டு விடானுதலால் 'மூர்க்கற்கயதி மொழியற்க' எனக் கூட்டி முடித்துக் கொள்க. முதலையும் மூர்க்கனும் கொண்டதுவிடா என்பது இதன் பழமொழி. அது இங்கு ஏதுவாயிற்று "நீலமுண்டது பிறிதாகாது" என்பதும் ஒரு பழமொழியாய் இங்குத் திட்டாந்தமாயிற்று.

169. காப்புடையார் வைத்த கடையு முதவா
தூப்புடைய மன்னர்க்கே துப்புரவ தல்லா
லிரப்பிடும்பை மிக்கார்க் குதவவொன் றீதல்
சுரத்திடைத் தீரப் பெயல்.

எ-து. பகைவரைத்தூக்குந் தூப்பையுடையவரசர்க்கே யுதவுவதன்றிப் பிறர்க் கில்லையென்றுகாக்குங் காப்புடையார்வைத்தபொருள்கள் பின்புந் தமக் குதவமாட்டா; இடும்பைமிக்கா ரிடும்பைக் குதவ வொருபொருளை யீதல் வெயிலாற் சுடப்பட்ட வெஞ்சுரத்தின்கண் மிகவு மழைபெய்ததனோடொக்கு மென்றவாறு.

(குறிப்பு.) இது, மிக்கபொருளுடையார் இவறலின்றி வறியோர்க்குப் பொருளானுதவிபுரிகவென்கிறது. 'கரப்புடையார்வைத்த துரப்புடைய மன்னர்க்கே துப்புரவதல்லால்,கடையுமுதவா' எனக்கூட்டுக. பகைவரைத் தூக்குந் துரப்புடைய வரசர் என்றது அவரது செலவுமிகுதியானும் வலிமிகுதியானும் செலவொன்று மில்லாதார் தேடிக்கூட்டி வாளாவைத்த வைப்பினைப் பறித்துக்கொள்ளுமியல்புணர்த்தியவாறு. பிறர்க்கு என்றது அவர்க்கு மறுதலையாயுள்ள வறிஞர்க்கு என்றவாறு. வைத்த, பொருள்கள்—வழங்கலுந் துய்த்தலுமின்றி யிவறிக்கூட்டிச் சேமித்து வைத்த பொருள்கள். பின்புந் தமக்குதவமாட்டா என்ற உம்மையால் முன்பு தமக்குதவமாட்டாது நின்றே காலங்கழித்த அப்பொருளின தியல்புகொண்டு பின்பு முதவாமை தெளிவித்தவாறு. இடும்பைக்குதவ என்றது இடும்பைதீர்த்தற்கு உதவியாக என்றபடி. ஒருபொருளையீதல் என்றது அவரிடும்பை தீர்தற்குரிய யாதேனுமொருபொருளை எவ்வாறேனும் அவ்வீகை யென்றவாறு. வெஞ்சுரம் நீர்ப்பசையற்ற சுடுநிலம். மிகவும் பெய்தல்—அந்நிலங்குளிரப்பெய்தல். நீர்நிலையிற்பெய்யும் மழையினும் சுரத்திடைப்பெய்யும் மழையே பிறரால் மகிழத்தகுமாறுபோல வலியசெல்வராகிய அரசர்க்குதவுதலினும் எளியவறியோர்க்குதவுதல் மிகவும் மகிழத்தக்கதெனப் பொருளொடு பொருத்தி யுரைத்துக்கொள்க. இதன்பழமொழி வருந்துவோர்க் குதவு முதவிக்கு மருகாந்தாரத்திலே யொருபாட்ட மழைபெய்தாற் போலே என உவமைபற்றி அடிப்பட வழங்கப்பட்டுவரும் தொடர் மொழியாம்.

170. உரிஞ்சி நடப்பாரை யுள்ளடி நோவ
நெருஞ்சியுஞ் செய்வதொன் றில்லை—செருந்தி
யிருங்கழித் தாழு மெறிகடற்றண் சேர்ப்ப
பெரும்பழியும் பேணாதார்க் கில்.

எ-து, தம் மடியின லுரிஞ்சிநடப்பாரை யுள்ளடிநோவ நெருஞ்சிமுள்ளுஞ் செய்வதொன்றில்லை; அதுபோலச் செருந்திமரங்க ளிருங்கழியிலேவந்து தாழத் தழைக்கு மெறிகடற்றண்சேர்ப்பனே! பெரும்பழியு மஞ்சிப் பாதுகாவாதார்க் கில்லை யென்றவாறு.

(குறிப்பு.) இது, நெறிகடந்தொழுகுவார் பழிக்கஞ்சார் என்கிறது. உரிஞ்சி—தேய்த்து. உள்ளடிநோவ என்றது அதன்மீது அடியெடுத்து வையாதிருக்கும்படிமிக்கதுன்பமுண்டாக என்றவாறு. நெருஞ்சியும் என்

றது நெறிப்படநடப்பா ரடியிடவருந்தும் நெருஞ்சிமுள்ளும் என்றவாறு. செய்வதொன்றில்லை என்றது அதுசெய்யுந்துன்பத்தை நெறிகடந்து நடப்பார் ஒரு பொருட்படுத்தாராதலா லவர் அதற்கஞ்சமாட்டா ரென்ற வாறு. இவ்வாறே 'பெரும்பழியும் அஞ்சிப் பாதுகாவாதார்க்கில்லை' என் பதற்கு நெறிகடந்தொழுகுவார்க்குப் பெரும்பழியுளதாயினும் அதனை அவ ரொருபொருட்படுத்தாமையால் அவர் அதற்கு அஞ்சார் என்பது கருத்தாகக்கொள்க. அவரை நம்பலாகாதென்பது குறிப்பு. நெருஞ் சிக்கஞ்சா துரிஞ்சிநட என அதிக்கிரமத்திலொழுக்குவார் கூறும் அடிப்பட்டகூற்றே இங்கெடுத்துக் கொண்ட பழமொழியாம்.

171. மாரியொன் றின்றி வறந்திருந்த காலத்துப்
பாரிமடமகள் பாண்மகற்கு—நீருலையுட்
பொன்றிறந்து கொண்டு புகாவாக நல்கின
ளொன்றாகு முன்றிலோ வில்.

எ-து, மாரியென்பதொன்றின்றி யுலகம்வற்றியிருந்தகாலத்துப் பாரிமடமக ளிரந்துவந்தானொருபாண்மகற்குச் சோறுபெறுமையா லுலையுட் பொன்னைப் பெய்துகொண்டு திறந்த சோறாகவே நல்கின ளாதலா லொருதன்பமுறுதமனை யில்லை யென்றவாறு; அல்லதூஉஞ் சோறுமரிதாகியகாலத்துப் பொன்னே சோறாக வுதவினளாதலாற் சென்றிரந்தா லொருபயன்படாதமனையில்லை யென்றவாறு.

(குறிப்பு) இது, குடிவாழ்க்கையுடையார் முட்டுப்பாடுற்றவிடத்தும் தம்மையடைந் திரந்து நிற்பார்க்குத் தம்மா லியல்வதொன் றேதேனு முதவவேண்டு மென்கிறது. மடமகள்—மடமையுடைய பெண்டாட்டி; இங்கு மடமை, நியுலையுள்வேகும்பொன்னை நீருலையுள் வேகவைத்த முயற்சிக்கேற்ற கருத்துடையடையாயிற்று. நீருலை என்றது உலையை வெளிப்படையாக்கியபடி; வியப்புக்குறிப்புமாம். மூலத்துள், 'பொன் றிறந்து கொண்டு' என்றிருப்பது சில பிரதிகளிற் 'பொன்றந்து கொண்டு' என்று காணப்படுகிறது. பொன்றிறந்துகொண்டு என்ற பாடத் துள்ளும் அதனையுள்ளும் 'திறந்து' என்பதற்கு ஒரு பொருட்சிறப் பின்மையால், 'பொன்றந்து கொண்டு' என்ற பாடமே சிறந்ததென்று கொள்ளத்தக்கது. சோறுபெறுமையால் எனக் காரணம் விரித்துரைக் கப்பட்டது. பொன்னைப் பெய்துகொண்டு என்றது பொற்காசைத்தைப் பெய்துவைத்துக்கொண்டு என்றவாறு. உணவு உறு என்றுவதுபோலப்

புகவு புகாவென்றுயிற்று. புகவு வாயுட் புகுதலால் அப்பெயர்பெற்றது. சோறுகவேநல்கினுளென்றது உணவாகப்பாவித் துதவினுளென்றபடி. ஒருதுன்பமுமுறுதமனையில்லை என்றது குடிவாழ்க்கை யுடையார்க்குப் பொருண்முட்டுப்பாட்டாற் றுன்பம்வருத லியல்பு; அது பொறுத் தொழுகற்பால தென்றவாறு. அல்லதூஉம் என்றது இப்பொருளுடன் பொருந்த இரட்டுறமொழிதலாற் பிறிதொருபொருளுமுண் டென்ற குறிப்புணர்த்தியவாறு. சென்றிரந்தால் ஒருபயன்படாதமனை யில்லை யென்றது மனைவாழ்க்கை யு டை யா ர் இரப்பார்க்குத் தம்மாலியல்வ தேதேனுமொன்றை யுதவி யுபகரிக்கவேண்டுமென்னும் குறிப்புணர்த்திய படி. வீடென்றிருந்தா லேதேனுமிருக்கும் என அவ்விருபொருளும்ப டவழங்கும் உலகவழக்கே யிங்கெடுத்துக்கொண்ட பொருளையுணர்த்தும் பழமொழியாயிற்று. இதனுள், எதேனுமிருக்கும் என்பது ஏதேனு மொருகுறைபாடிருக்கு மெனவும், இரப்பார்க்குதவும்படி யேதேனு மொருபொரு ளில்லாமற்போகாதெனவும் இருபொருளுந் தோன்ற நின்றமை காண்க.

172. உறுமக னாக வொருவனை நாட்டிப்
பெறுமாற்ற மின்றிப் பெயர்த்தே பொழிதல்
சிறுமைக் கமைந்ததோர் செய்கை யதுவே
குறுமக்கள் காவு நடல்.

எ-து, தனக்குறுதிசெய்வானொருமகனாக வொருவனை யொருகருமத்திலே நிறுத்தி யவன்செய்த தொருகுற்றமுண்டென்னுஞ்சொல்லின்றியே யவனை யக் கருமத்தினின்று தவிர்த்தொழிதல், சிறுமைக்குணத்துக்கெல்லா மமைந்ததொரு செய்கையாம்; அது பிள்ளைகள் காவுநடுதலோடொக்கப் பயன்படாதா மென்ற வாறு.

(குறிப்பு.) இது, அரசன் உத்தியோகத்திலிருப்பவரை யொருகுற்ற மின்றித்தவிர்க்கலாகாதென்கிறது. தனக்கு என்றது காரியங்கொள்ளு தற்குரியோனாகிய அரசனுக்கு என்றபடி. உறுதி-தொழிற்பெயர்; சாதியொ ருமை. உறுதிசெய்தல்—உறுவனவாகியகாரியங்களைச்செய்தல். கெடுதி யைச்செய்யுங்காலத்தைக் கெடுகாலமென்பதுபோல உறுதியைச்செய்யும் மகனை "உறுமகன்" என்றார். கருமம்—உத்தியோகம். நிறுத்தி—வைத்து. பெறுமாற்றம்—ஒருகுற்றந்தோன்றியவழி அவனை விசாரித்து அவனி

டத்துநின்று குற்றமுண்டென்று பெற்ற மறுமொழியாகிய பிரத்தியுத்தரம். தவிர்த்தொழிதல்—ஒருசொல்; விலக்குதல் என்றபடி. சிறுமைக்குணம்-சிறுபிள்ளைத்தனமாகிய செயல்கள்; அவை நீரவிசாரியாமை, மனஞ்சென்றபடியேசெய்தல், செயலின்விளைபயன் கருதாமை, பிறர் துன்பமறியாமை முதலியன. அமைந்தது—பொருந்தியது. ஒரு செய்கையாம் என்றது சிறுமைக்குணங்கள் பலவற்றிற்கு மிலக்கியமாயமையு மிச்செய்கையின் சிறுமைப்பாட்டின் மிகுதி காட்டியவாறு. "குறுமக்கள் காவுநடல்" என்பது பழமொழிக்கூற்று. இதனைச் சிறுபிள்ளைகள் தோட்டம் வைத்து விளையாடுமிடத்து ஒரு செடியை ஓரிடத்துநாட்டிப் பின்பு ஒருகாரணமுமின்றி அதனைப் பிடுங்கியெறிவதும், வேறிடத்து நடுவதுமாகிய அவர் விளையாட்டுச்செயலால் அச்செடிகட்குத் தீங்குண்டாதலன்றி வேறொருபயனும் விளையாதவாறுபோல, உறுமகனுகவொருவனை நாட்டிப் பெறுமாற்றமின்றிப் பெயர்த்தொழியும் சிறியார்செயலானும் நாட்டப்பட்டார்க்குத் தீங்குண்டாதலன்றி வேறொருபயனும் விளையாதெனப் பொருளோடுபொருத்தி யுரைத்துக் கொள்க.

173. அல்லது செய்வா ரரும்பொரு ளாக்கத்தை
நல்லது செய்வார் நயப்பவோ—வொல்லொலிநீர்
பாய்வதே போலுந் துறைவகே டியன
வாவதே போன்று கெடும்.

எ-து, பாவத்தைச்செய்வாரரும்பொருளதீட்டத்தை நல்லவறத்தைச் செய்வார் விரும்புவரோ? ஒல்லொலிநீர் பார்மேலேறிப் பாப்பதே போலுந் துறைவனே! கேளாய்; தீயகருமங்கள் செல்வமாவதொருகருமம் போலே யிருந்து கெட்டுப்போமாதலா லென்றவாறு.

(குறிப்பு.) இது, தீவினை புரிந்து பொருளீட்டலாகா தென்கிறது. தீயகருமங்களாவன, அருளும் அன்புமின்றிப் பாவமும் பழியும் பாராது பிறரைவஞ்சித்தல் முதலியன. செல்வமாவதொரு கருமம்போலேயிருந்து என்றது ஆக்கத்திற்குக் காரணமாவதுபோலே தோன்றி என்றவாறு. கெட்டுப்போம் என்றது ஆக்கத்தையளிக்காததனை யழித்துக் கெடு மென்றவாறு. ஆவதுபோலக்கேடும் என்ப திதன் பழமொழி. இது, "களவினாலாகிய வாக்க மளவிறந்-தாவது போலக் கெடும்"* எனக் குறளில் வழங்கப்பட்டது.

* 29-ம் அதி கள்ளாமை-3.

174. யாந்தீய செய்த மலைமறைத்த தென்றெண்ணித்
தாந்தீயார் தந்தீமை தேற்றரா—லாம்பன்
மனைவில் கமழு மலிதிரைச் சேர்ப்ப
கணையினுங் கூரியவாங் கண்.

எ-து, யாஞ்செய்ததீவினைகளைப் பிறர்க்குவெளிப்படாமன் மலைமறைத்த தென்றுகருதித் தீயார் தாஞ்செய்ததீமையைத் தெளியாரால்; ஆம்பற்பூக்கள் கலியாணஞ்செய்யுமனைபோலக் கமழாநின்ற மலிதிரைச்சேர்ப்பனே! அம்பினுங் கூரியவா யுட்புக்குக் கண் மறையச்செய்தபொருள்களைக் காணவல்லவா மென்றவாறு. அம்பு குறித்தெய்ததானமொழித்துப் படாது, கண் பலவிடத் தும்படு மென்றதாம்.

(குறிப்பு.) இது,ஒருவருமறியாரென்று மறைந்திருந்து தீவினைசெய் யற்கவென்கிறது. இங்கு மலைஉபலக்ஷணமாதலால் மதிள்,இருள் முதலிய மறைப்பனபிறவும் பொருளாகக் கொள்க. தீயார்—தீப்போலுஞ் சுடுதொழி லுடையார். தாஞ்செய்த தீமையைத் தெளியார் என்றது மலையகத்து மறைவிற் காடுபற்றியெரியுந் தீ தான் செய்யுங்கெடுதியைத் தான் றெளி யாதாயினும் புறத்தேயுள்ள பிறர் புகைமுதலியகுறிகளாற் றெளிவது போல மறைவிடத்திருந்து தீயார்செய்யும் கெடுதியை அவர் தெளியா ராயினும் அதற்குரிய குறிகளாற் பிறர் தெளிவரென்றவாறு. கண் பல விடந்தும்படு மென்றது அது காணக்கருதும்பொருளினும் அதனைக் கருதியுணருங் குறிகளினும் பலவாறாகப்பட்டுப் பொருளையுணருங் கரு வியா மென்றவாறு. கணையிலுங்கூரியகண் என்பது இதன் பழமொழி.

175. வேளாண்மை செய்து விருந்தோம்பி வெஞ்சமத்து
வாளாண்மை யாலும் வலியராய்த்—தாளாண்மை
தாழ்க்கு மடிகோ ளிலராய் வருந்தாதார்
வாழ்க்கை திருந்துத லின்று.

எ-து, பிறர்க்குபகாரஞ்செய்து வந்தவிருந்தகளையுமோம்பி வெய்யபோரின் கண் வாளாற்செய்யுமாண்மையாலும் வலியராய்த் தாளாண்மையைக் குறைவிக் குஞ் சோம்புகோடலையிலராய் முயன் றுவருந்தாதாருடையமனைவாழ்க்கை திருந்துதலில்லை யென்றவாறு.

(குறிப்பு.)இது, மனையறம்புரியுந்திறங் கூறுகிறது. பிறர்க்குபகாரஞ் செய்தலாவது ஒருதளர்ச்சியுற்றார்க்கு மன மொழி மெய்களாலும்பிறவாற்றானும் வேண்டுமுதவிபுரிதல். விருந்து—இங்கு ஐவகை வேள்விக்கு உபலக்ஷணம். வெஞ்சமத்து வாளாண்மையாலும் வலியராய் என்றது பொருட்கேடுவிளைக்கும் விரோதிகளைப்போக்குந்திறமுடையராய் என்றபடி. தாளாண்மை—முயற்சி. சோம்புகோடல்—சோம்பலுடையாதல். முயன்று—பொருள்படைக்கமுயன்று. திருந்துதல்—செவ்விதாதல். வருந்தாதார் வாழ்க்கை திருந்தாது என்பது இதன் பழமொழி.

176. உரைத்தவர் நாவோ பருந்தெறியா தென்று
சிலைத்தெழுந்து செம்மாப் பவரே—மலைத்தா
லிழைத்த திகவா தவரைக் கனற்றிப்
பலிப்புறத் துண்பா ருணா.

எ-று,பிறரையுரைக்கத்தகாதனவற்றையுரைத்தவர்நாவினைப் பருந்தெறியாதென்றுசொல்லி யெல்லாருடனும்வெகுண்டெழுந்து களிப்பாலே தம்மொடு மாறுபட்டார், அம்மாறுபட்டாரைச் செய்பகினைத்தனசெய்துமுடிக்கவல்லாரை வெகுள்வித்து மாறுபட்டாராற் றிறந்தபோய்ப் பலியிடுங்கல்லின்புறத்திட்ட வுணவினையுண்ப ரென்றவாறு.

(குறிப்பு.) இது, ஒருவரையும் அதிக்கிரமித்துப் பேசுதலாகா தென்கிறது. உரைக்கத்தகாதன—பழிமொழிகள். பருந்தெறியாதென்று என்றது ஒறுப்பாரில்லையென்று என்றவாறு. சொல்லி யென்றது தாம் எண்ணுதலோடமையாது அக்கருத்தைப் பிறரு மறியச்சொல்லி யென்றவாறு. பலியிடுங்கல்—பிண்டபலியும் பிரபூதபலியும் இடுதற்கு ஊன்றிய (பாஷாணஸ்தாபனம்பண்ணிய) கல். அக்கல்லின்புறத்திட்டவுணவு—வாஸோதக திலோதகங்களும் பலிகளும். உண்பர்—உணவாகக்கொள்வர். இதனால் உயிரிழப்பரென்பது குறிப்பாயிற்று. ஒறுப்பவரில்லையென்னுங் கருத்தில், பருந்தெறியாது என வழங்கும் குறிப்புமொழியே இங்கெடுத்துக்கொண்ட பழமொழியாயிற்று. இது, 'இருந்தபடி சொன்னாற் பருந்தடிக்குமோ?, எனவும் இதன் பொருள்பற்றித் 'தீயென்றால் நாவேகுமோ?, எனவும் வழங்கப்படும்.

177. களமர் பலரானுங் கள்ளம் படினும்
வளமிக்கார் செல்வம் வருந்தார்—விளைநெல்
லரிந ரணிதிறக்கு மூர வறுமோ
எரிநக்கிற் றென்று கடல்.

எ-து, தமக்குத் தொழில்செய்வார்பலராலுங் களவுகாணப்படினும், பொருள்வருவாயான்மிக்கார் செல்வங்குறைந்து வருந்தார்; விளைந்தநெல்லையே யறுக்கப்புகுவார் நீர்வடிய அணையைத்திறக்குமூரனே! நரிநக்கிற்றென்று கடலீர் அறுமோ அதுபோல என்றவாறு.

(குறிப்பு) இது, பெருஞ்செல்வமுடையோர் தம் களமர்கொள்ளும் சிறுகளவை உபேக்ஷித்திருக்கவேண்டுமென்கிறது. களமர்-பொருளீட்டும்வினைக்களத்துக்குரியோர். 'விளைந்தநெல்லையே அறுக்கப்புகுவார்' என்றது அவர் தீசாவிபறுத்தறியாத விளைவின்சிறப்புணர்த்தியவாறு. நீர்வடிய அணையைத்திறத்தலாவது நெற்கதிரறுத்தற்கு வயலுலரவேண்டிக் காலில் நீர்வாராதிருக்கும்படி ஆற்றிலணையைத்திறந்து நீர்வடிப்பது. நரிநக்கிற் கடல்குறையுமா என்பது இதன் பழமொழி. இதனை, இனம்பற்றி, "ஓசைபெற்றுயர்பாற்கடலுற்றொரு—பூசைமுற்றவுநக்குபுக்கென"* என்றார் கம்பநாடர். இது, ஒப்புமைபற்றி ஈக்குடித் தேருமைப்பால்குறையுமா என நாட்டுவழக்கில், களமர்சிறுகளவு உபேக்ஷிக்கத்தக்கதென்னுங் குறிப்பில் வழங்கப்படுகிறது.

178. ஆண்டகை மன்னரைச் சேர்ந்தா ரலலுறினு
மாண்டொன் றும் வேண்டுது மென்ப துரையற்க
பூண்டாங்கு மார்ப பொருடக்கார் வேண்டாமை
வேண்டிய தெல்லாந் தரும்.

எ-து. ஆண்டகைமையையுடைய அரசரைச் சேர்ந்தொழுகுவார் தாம் வறுமையால் அல்லலுற்றாராயினும் அவர்மாட்டொன்றனைவேண்டுவோமென்பதனை மனத்தால் நினையாதொழிக; பூண்டாங்கு மார்பனே! பிறரான்மதிக்கப்படுவார் ஒன்றனை வேண்டாதொழுகுதல் தாம் வேண்டியபொருளெல்லாவற்றையுந்தரும் என்றவாறு.

(குறிப்பு) இது, மன்னரைச் சேர்ந்தொழுகுமாறு கூறுகிறது. ஆண்டகைமை - ஆளுந்தன்மை. உரையற்கவெனக் காரணத்தைக் காரியமாக்கிக்கூறினர். அதனால் வாயாலுரைத்தலும் கூடாதாயிற்று. தக்கார் பொருள்வேண்டாமை எனக் கூட்டுக. 'ஒன்றனை' என்றது தமக்கின்றியமையாதபொருள்களுள்ளும் ஒன்றையும் என்றவாறு. வேண்டாதொழுகுதல் - தாம் விரும்பாதொழுகுதல் 'வேண்டியபொருளெல்லா

* கம்பராமாயணம், அவையடக்கம்.

வற்றையும் தரும்' என்றது விரும்புதற்குரியபொருளெல்லாவற்றையுந் தரும் என்றவாறு. வேண்டாமையானது வேண்டியபொருளெல்லா மடைந்திருந்தாற்போலும் மனநிறைவைப் பயத்தலானும், இவர் தமக்கு வேண்டியவற்றை விரும்பிக்கேளாரெனநினைந்து, அரசர் தாமே அவர் வேண்டுதற்குரியபொருள்களையளித்துப் பெருமையெய்துவராதலாலும் அவ்வேண்டாமையே வேண்டியதெல்லாந்தருமென விரித்துரைத்துக் கொள்க. வேண்டாமை வேண்டியதெல்லாந்தரும் என்பது இதன் பழமொழி. இது, "வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை"* எனவும், "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது, வேண்டாமை வேண்ட வரும்"† எனவும் பொருள்பற்றி வழங்கப்பட்டது.

179. யாவரே யானு மிழந்த பொருளுடையார்
தேவரே யாயினுந் தீங்கோர்ப்பர்—பாவை
படத்தோன்று நல்லாய் நெடுவேல் கெடுத்தான்
குடத்துள்ளு நாடி விடும்.

எ - து, கெடுத்ததொருபொருளையுடையார் எல்லாஅறிவினையுமுடைய ராயினும், தேவர்களேயாயினும் தீங்குசெய்தாராக மனத்தின்கட் கருதுவர்; சித்திரப்பாவையின்றன்மையுளதாகத்தோன்றும் வடிவையுடையநல்லாய்! நெடுவேலைக்கெடுத்தவன் குடத்துள்ளேயுநாடுமாதலாற் றம்மை யயிர்த்தானென்று அவனைக் குற்றங்கொளப்படா தென்றவாறு.

(குறிப்பு) இது, பொருள்கெடுத்தோரால், கவர்தல்பற்றி ஐயுறப் பட்டார் பொறுத்துக்கொள்ளவேண்டுமென்கிறது. 'இழந்த பொருளுடை யார்யாவரேயாயினும்' எனக் கூட்டுக. கெடுத்தபொருள்—களவு முதலியவற்றாற் காணுதொழிந்தபொருள். "இழந்தபொருளுடையார்" என்றது ஒருபொருளிழத்தலையுடையார் என்றவாறு. 'எல்லாவறிவினையு முடையாராயினும்' என்றது தேவரிடத்துத்தீங்குணர்தற்குத்தடையான காட்சி, அநுமிதி, சாத்தம என்னும உண்மைபறிவுகளையெல்லாமுடைய ராயினும் என்றபடி. இதனுல் இவ்வறிவில்லாதார் ஐயுறுதலைப்பொறுத் துக்கொள்ளவேண்டுமென்பது சொல்லவேண்டாதாயிற்று. 'தேவர்களை யாயினும்' என்றது வணங்குவோரையெல்லாம் அகப்படுத்திக்கூறியவாறு.

---

* திருக்குறள் 37-ஆம் அதிகாரம் அவாவறுத்தல்—3.
† ஷை ஷை ஷை ஷை 2.

'நீங்குசெய்தாராக' என்றது களவுசெய்தாராக என்றவாறு. 'நெடுவேல் கெடுத்தவன்'-நெடியவேலாயுதத்தை வைத்தவிடமறந்து கெட்டுப்போக விட்டவன். 'குடத்துள்ளேயும்' என்றது அவ்வேல் புகுந்து மறைந்திருத்தற்கு இடம்பற்றாத குடத்தின்கண்ணேயும் என்றவாறு. இது அதிசயோக்தியாய்க் கெடுபொருளிருத்தற்குரித்தாகாத இடத்தையும் தேடுவனென்னும் பொருளுணர நின்றது. இதனையே பிறிதோராற்றால் "ஒருவனவன் யானைகெடக் குடத்துட்செங்கை யோட்டுதல்போல்" * என வழங்குவர். 'நாடும்' என்றது தான் சேமித்துவைத்திருக்கக்கூடுமென்று தன்னையும் ஐயுற்றாராயும் என்றவாறு. இதனாற் பிறரை ஐயுறுதலும் பிற இடங்களை ஐயுறுதலும் சொல்லவேண்டாவாயின.

180. வெள்ளமாண் பெல்லா முடைய தமரிருப்ப
வுள்ளமாண் பில்லா வொருவரைத்—தெள்ளி
மறைக்கட் பிரித்தவரை மாற்றா தொழிதல்
பறைக்கட் கடிப்பிடு மாறு.

எ - து, வெள்ளம்போல அளத்தற்கரிய மாண்டகுணமெல்லாமுடைய தமர் அவ்விடத்திருப்பக் கொண்டு உளத்தின்கண் மாட்சியில்லாத வொருவரை ஆராய்ந்து சூழ்ச்சிக்கணீக்கி அவரை மாற்றாதொழிதல் பறையின்கட் கடிப்பிட்டெறிதலோடொக்கும் என்றவாறு.

(குறிப்பு) இது, மனநலமில்லாதவரோடு மந்தணமுரைக்கலாகாதென்கிறது. வெள்ளமென்பது மிகப்பெரியதோரெண்ணுக்குப் பெயராதலால் அது ஈங்கு அளத்தற்கருமை குறித்துநின்றது. மாண்ட — மாட்சிமையுடைய. குணம்—நற்குணங்கள். தமர்—தமக்குரியர்; குணங்களாலும் உரிமையாலும் நன்மைபயப்பனசெய்பக்கருதுவோர் என்பது குறிப்பு. 'இருப்பக்கொண்டு' என்றது இருப்பக்கொள்ளவேண்டுமென்னும் உடம்பாட்டளவாய்நின்று 'நீக்கி' என்னும் வினையெச்சவினைகொண்டது. 'ஒருவரை' என்றது சிலரை என்றபடி; இது, ஒருவரையுணர்த்தும் ஏகசத்தத்தாற் சிலரை வழங்கும் வடமொழிமுறைபற்றிவந்தது. இதனை ஒரு சிலர் என்பதனுள் ஒருமை சின்மையுணர்த்தச் சிற்சிலர் என்னும் பொருள்தோன்றுதலாலும் அறிக. சூழ்ச்சிக்கண் நீக்குதலாவது சூழ்ச்சிசெய்வாரிடைச் சேர்க்காது விலக்குதல். மாற்றுதலாவது

* தாயுமானவர்பாடல், ஆகாரபுவனம், சிதம்பரரகசியம், செய்—29.

பிறிதொருபுறத்தொழிலில்வைத்தல்; இதனால் அவரைப் புறத்தொழிலில் வைத்துக்கொள்ளாது உடனே அகற்றுவதும் நின்குபயக்குமெனபது குறிக்கப்பட்டது. 'பறையின்கட்கடிப்பிட்டெறிதலோடொக்கும்' என்றது ஒருசெய்தியைப் பிரசங்கப்படுத்தக்கருதுவோர் பறையின்கட் கடிப்பிட்டெறிந்து அச்செய்தியைச்சொல்லி யாவரும் அறியச்செய்வதுபோல அவரும் அச்சூழ்ச்சியைப் பிறர் அறியச்செய்வ ரென்றபடி. கடிப்பு—குறுந்தடி. எறிதல்—அடித்தல். இக்கருத்து, "அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட—மறைபிறர்க் குய்த்துரைக்க லான"* எனக் குறளுள்ளும் கொள்ளப்பட்டது. பலரு மறியச்செய்ததாகும் என்னும் பொருளிற் 'பறைபடித்ததுபோலும்' எனவழங்கும் குறிப்புமொழியே இங்கெடுத்துக்கொண்ட பழமொழியாயிற்று.

181. வெற்றிவேல் வேந்தன் வியங்கொண்டால் யாமொன்றும்
பெற்றிலே மென்பது பேதைமையே—மற்றதனை
யெவ்வ மிலராகிச் செய்க வதுவன்றோ
செய்கென்றா னுண்கென்னு மாறு.

எ-து, வென்றியையுடையவேல்வேந்தன் ஒன்றனைச்செய்கவென் றேவல் கொண்டால், யாம் ஒன்றும்பெற்றிலேமென்றுமறுத்தல் ஒருவர்க்கறியாமையே யாம்; அவரேவியகருமத்தைத் துன்பமிலராகிச் செய்க; ஒரு கருமத்தைச் செய்கவென்றவ னுண்கவென்னுமாறன்றோ அது என்றவாறு.

(குறிப்பு) இது, பயனடைதலி லேயப்பாடின்றியே வினைவிழை வோர் அரசனேவிபனபுரியவேண்டு மென்கிறது. 'வென்றியையுடைய வேல்வேந்தன்' என்றது அவனுடைய ஆக்கமிகுதியுணர்த்தியவாறு. 'ஒன்றனை, என்றது செய்தற்கேவுங்காரியத்தின் நியமமின்மைகூறியவாறு. 'செய்க' என்றது உயர்ந்தோர் இழிந்தோர் எல்லோருமகப்படக் கூறியவாறு. 'ஏவல்கொண்டால்' என்றது அவ்வேவலின் கிடைத்தற் கருமைகாட்டியவாறு. 'யாம்' 'பெற்றிலேம்' என்பன அவ்விருவகையோரு மகப்படக்கூறு மறுத்தலைத்தில்வந்த தன்மைபொருமைப்பன்மை. 'ஒருவர்' என்றது அவ்விருவகைபோரு மகப்படவந்த படர்க்கையொருமைப் பன்மை. 'யாம் ஒன்றும்பெற்றிலேமென்று மறுத்தல்' என்றது முன் செய்துபோந்த செயல்களுக்கே பயன்பெறாதிருப்பினும், அதனை வது

* திருக்குறள் 108-ஆம் அதிகாரம் கயமை—6.

வாகக்கொண்டு மறுத்துரைத்தல் என்றவாறு. மறுத்தல் அறியாமை எனக் காரியம் காரணமா யுபசரிக்கப்பட்டது. "செய்கென்றானுண் கென்னுமாறு" என்றது செய்யச்சொனனது உண்ணச்சொன்னது எனப் பயனில் தெளிவுபற்றிவழங்கும் பழமொழிக்கூற்று. 'செய்க என்றவன் உண்க என்னுமாறு' என்றது செய்கவென்றேவினவன், செய்வோனை அக் கருமப்பயன்பெற்றுண்க என்று ஏவியதாமெனக் காரிய காரணவொற்றுமையால் வினைப்பயன் தவறுதடைவிப்பன் என்பது குறித்துநின்றது. அது என்றது வியங்கோடலைச் சுட்டிநின்றது.

182. கொழித்துக் கொளப்பட்ட நண்பி னவரைப்
பழித்துப் பலர்நடுவட் சொல்லாடா ரென்கொல்
விழித்தலரு நெய்தற் றுறைவ வுரையா
ரிழித்தக்க காணிற் கனா.

எ-து, ஆராய்ந்து தம்மாற்கொள்ளப்பட்ட நண்பினையுடையாரைப் பலர் முன்னே பழித்துச் சொல்லாடலாகாது; அது என்னைகாரணமென்னின், விழித்தாற்போல அலராநின்ற நெய்தற்றுறைவனே! பிறர்க்குரைக்கத்தகா திழிக்கத்தக்கனவற்றைக் கனவின்கட்காணின் அவற்றைப் பிறர்க்குரையாதது போல என்றவாறு.

(குறிப்பு) இது, நட்பாளரைப் பழிதூற்றலாகாதென்கிறது. 'ஆராய்ந்து தம்மாற்கொள்ளப்பட்ட நண்பினையுடையா'ர் என்றது, ஒருவரது குணதோஷங்களையாராயாது நண்புகொள்ளலாகாது; ஆராய்ந்தே கொள்ளவேண்டும், என்னும் நியமமுடைமையால் நண்புகொள்ளுமுன்னமே தாம் ஆராய்ந்திருக்கவேண்டும் என்பதும், அவரிடைப் பழியுளதாயின் அது தம்மாலறியப்பட்டே அதற் குடம்பட்டுக்கொள்ளப்பட்டமையால் அவர் தம்மாற் பழித்துரைக்கற்பாலரல்லர் என்பதும் அறிதற்கு ஏதுநுதலிய கருத்துடையடையாய் நின்றது. 'பலர்முன்னே' என்றது பிறர்முன்னே என்றபடி. இதனால் அவர் தனித்திருக்குமிடத் தவர் பழியெடுத்திடித்துரைத் தொழிப்பிப்பது தவறாகாதென்பது குறிப்பாயிற்று. 'அது' என்றது பிறர்முன் பழித்துரையாடாமையைச் சுட்டிநின்றது. 'என்னைகாரண'மென்றது எவ்வாறென்னும்பொருளுணாநின்றது. 'விழித்தலர்தல்' என்பது படுத்துக்கிடத்தல் என்பது போல் ஒருசொல்லாய் நெய்தற்கு அடையாயிற்று. 'பிறர்க்குரைக்கத்தகா' தென்றது அசப்பியமாயென்றபடி. 'இழிக்கத்தக்கன' வென்றது

உரைப்பாரைக் கேட்போ ரிழிக்கத்தக்கன என்றவாறு. 'கனவின்கட் காணின்' என்றது கனவின்கட்கண்டாலும் என்றவாறு. இதன்பழமொழி இடக்கர்ச்சொல்லடியாய் இழிசனர்வழக்கில் முன்னிலையாக வழங்குவ தொன்றை இடக்கரடக்கிப் படர்க்கையினமைத்துக்காட்டப்பட்டது.

183. வளமையுந் தேசும் வலியும் வனப்பு
மிளமையு மிற்பிறப்பு மெல்லா—முளவா
மதித்தஞ்சி மாறுமஃ தின்மையாற் கூற்றங்
குதித்துய்ந் தறிவாரோ வில்.

எ - து, செல்வமும் விளக்கமும் வலியும் அழகும் இளமையும் குடிப்பிறப்பும் என்றிவையெல்லாம் ஒருவற்குக் கூடவுளவாயினும், அவற்றைமதித் தஞ்சி நீங்குஞ்செய்கை அக்கூற்றிற்கின்மையால் அக்கூற்றைக்கடந்து பிழைத்தறிவாரில்லை என்றவாறு.

(குறிப்பு) இது, உயிர்வாழ்க்கை நிலையுடையதென்றெண்ணியிருக்கலாகாதென்கிறது. விளக்கம்—பிரசித்தி. "எல்லாம்" என்றது இவற்றுள் ஒரொன்றுடையராயினும் அவர்க்கு வன்கண்ணாரும் தீங்கிழையாது மதித்து அஞ்சி மாறுதல் வழக்காறாகவும், கூற்றுக்கு அது சிறிதுமில்லை யென அதன்கொடுமைதோன்றக்கூறியவாறு. "கூற்றங்குதித்துய்ந்தறிவாரோவில்" என்றது பழமொழிக்கூற்று. இது இங்கு உயிர்வாழ்க்கை நிலையுடையதென்றெண்ணியிருக்கலாகாதென்னும் எச்சப்பொருளை முடித்தற்கு ஏதுவாசகமாயிற்று. 'சாகாதிருப்பாரொருவருமில்லை' எனச் சாதாரணவழக்கில் வழங்குந்தொடர்மொழியே இதன் பழமொழி யெனக்கொள்க. இது, "கூற்றங்குதித்துய்ந்தாரீங்கில்லை" என நாலடியுள்ளும் * வழங்கப்பட்டது

184. பொல்லாத சொல்லி மறைந்தொழுகும் பேதைதன்
சொல்லாலே தன்னைத் துயர்ப்படுக்கு—நல்லாய்
மணலுண் முழுகி மறைந்து கிடக்கு
நுணலுந்தன் வாயாற் கெடும்.

எ - து, நன்மையில்லாதனவற்றைப் பிறரைச்சொல்லிக் கரந்தொழுகும் பேதை தான்சொல்லுஞ்சொல்லாலே தன்னைத் துயரின்கண் அகப்படுக்கும்; நல்லாய்! மணலினுள்ளேமுழுகியே ஒளித்துறையும் நுணலும், தன் குரலைக் காட்டித் தன் வாயாலே தன்னைத்தின்பார்க்கு அகப்படுமதுபோலுமென்றவாறு.

* செல்வநிலையாமை செய்யுள்—6.

(குறிப்பு) இது, நாவடக்கமுடையராயிருக்கவேண்டுமென்கிறது. நன்மையில்லாதன-பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என இவை. மறைந்தொழுகுதலாவது தான் அச்சொல்லொன்றும் சொல்லாதான்போன்றுநடித்தல். 'தான்சொல்லுஞ் சொல்லாலே தன்னைத் துயரின் கண் அகப்படுக்கும்' என்றது தான் துயரிடைப்படுதற்குப் பிறிதொரு கருவியும் கருத்தாவும் கருமமும் வேண்டாது, தான்சொல்லுதலாகிய அச்செயலே கருவியும், சொல்லும்வினைமுதலாகியதானே கருத்தாவுமாய்த் துயரிடைப்படுத்தற்குத் தன்னையே கருமமுமாக்கிக்கொள்ளுவனென அப்பேதையின் அறியாமையைபெடுத்துக்காட்டுவார்போன்று அநிஷ்டபலஸித்தி கூறியவாறு. பின்னடி இரண்டும் பழமொழிக்கூற்று. தவளை தன் வாயாலே கெட்டது என்பது இதன் பழமொழி.

185. அகத்தா லழிவு பெரிதாயக் கண்ணும்
புறத்தாற் பொலிவுறல் வேண்டு—மெனைத்தும்
படுக்கை யிலராயக் கண்ணு முடுத்தாரை
யுண்டி வினவுவா ரில்.

எ - து, தம் மனையினுள்ளவறுமை பெரிதாயினவிடத்தும் புறத்தார் காணத் தம்முடையமேனி பொலிவுபெற்றிருத்தலைச் செய்யவேண்டும்; எப்படியாயினும் பாயலுட்படுக்குமாடையிலராகியவிடத்தும் உடுத்தவுடையாற்பொலிந்தாரை யுண்டிவினவுவாரில்லையாதலானென்றவாறு.

(குறிப்பு) இது, குடிமையுடையார் தம் தோற்றப்பொலிவு குறைதலாகாதென்கிறது. இங்கு "அகம்" என்பது மனையையுணர்த்தினமையால் இந்நெறி குடிமையுடையார்க் குரியதாயிற்று. அழிவு—அழிதற்குக் காரணமாகிய வறுமை. "புறத்தால்" என்றது வெளிப்படையாக என்னும் பொருளுணர்த்துதலாற் 'புறத்தார்காண' எனப் போந்த பொருளுரைக்கப்பட்டது. "எனைத்தும்" என்றது எனைத்தாயினும் என்றவாறு. எனைத்தும் பொலிவுறல்வேண்டுமெனக் கூட்டுக. "படுக்கையிலராயக்கண்ணும்" என்றது வறுமைமிகுதி காட்டியவாறு. 'பாயலுட்படுக்குமாடை' என்றது பாயுள்விரிக்கும் மூன்றாந்துணியை. 'உண்டி வினவுவாரில்லை' என்றது அறக்கூழ்ச்சாலையில் அன்னமுண்ணாற்கழைக்கப்படும் வறியராகக்கருதாது குடிமையுடையரென நன்குமதிக்கப்படுவர் என்றவாறு. வறியோரைக் 'கஞ்சித்தொட்டிகள்' என இக்காலத்தார் வழங்கும் வழக்குண்மையும் இங்கு நோக்கத்தக்கது.

186. கற்றதொன் றின்றி விடினுங் கருமத்தை
யற்ற முடிப்பா னறிவுடையா — னுற்றியம்பு
நித்தநீர்ச் சேர்ப்ப விளையானே யாயினு
மூத்தானே யாடு மகன்.

எ - து, காலநிகழ்ச்சியுந் தேசநிகழ்ச்சியுமுதலாயினவறியத்தக்கநூல்களைக்கற்குந்தன்மையொன்றின்றியிருந்தானாயினும், மடியின்றி யெக்காலமுங் காரியத்தின்கண்ணேமுயலுவான் கருமத்தைக் குறையறவே முடிப்பானாகி யுற்றுச்சொல்லாநிற்பன்; பிரளயகாலம்போலப் பரக்கும் நீரையுடையசேர்ப்பனே! இளையனேயாயினும் ஆடுமகன் மூப்பனாயினாற்போல வென்றவாறு.

அஃது கல்விவேறு கருமச்சூழ்ச்சி வேறு; இளையனாயினும் மூத்தான் மடியின்றிக் காரியத்தின்கண்முயல்வானென்றமாம்.

(குறிப்பு) இது, கல்வன்மையினும் காரியவன்மை மேலானதென்கிறது. காலநிகழ்ச்சி — அவ்வக்காலங்களில் வழங்கிய வழக்கங்கள். தேசநிகழ்ச்சி—தேசாசாரங்கள். 'முதலாயின' என்றது சாதிவழக்கம் குலவழக்கம் முதலியவற்றை. அவற்றையறியத்தக்கநூல்களாவன இதிகாசங்களும் அரசியனீதிநூல்களும் முதலியன. 'கற்குந்தன்மையொன்றின்றி' என்றது அத்தன்மை வழக்குரைப்பானுக்கு இன்றியமையாததென்பதுபட நின்றது. "அறிவுடையான்" என்றது இங்குக் காரியவுணர்ச்சியுடையானையாதலால் உபசாரவழக்காய் 'மடியின்றி எக்காலத்தும் காரியத்தின்கண்ணேமுயலுவான்' எனப் பொருள்விரித்துரைக்கப்பட்டது. அறவென்பது எதுகைநோக்கி "அற்ற" வென விரிக்கப்பட்டது. 'உற்றுச்சொல்லாநிற்பன்' என்றது அக்காரியப்பயிற்சியில்லாத கல்வியறிவுடையான்சொல்லும் மறுதலைவழக்கைத் தாக்கிப்பேசுவன் என்றவாறு. 'இளையனேயாயினும்' என்றது ஒருவீட்டில் உடன்பிறந்தாருள் வயதாற்சிறியனாயிருப்பினும் என்றவாறு. ஆடுமகன்—தன்வழக்கைப்பிறாதியப் பேசவல்லபிள்ளை. 'மூப்பனாயினாற்போல' என்றது அவ்வீட்டு முதல்வனை மதிக்கப்படுதல்போல என்றவாறு. இங்கு இளமை கல்வியறிவின்மைக்கு உவமையாயிற்று. 'கல்விவேறு; கருமச்சூழ்ச்சிவேறு' என்றது கல்வியானும் உயர்வுவேறு; கருமச்சூழ்ச்சியானும் உயர்வுவேறு; அதலாற் கருமச்சூழ்ச்சியுட்குறையுளதாகில் அதனைக் கல்வியுயர்வுகொண்டுநிரப்புதல் கூடாதென்றவாறு. மடியின்றிக் காரியத்தின்கண்முயல்வான் இளையனாயினும் மூத்தான் எனக் கூட்டுக. 'மூத்தான்' என்றது குறிப்புவினைமுற்று.

187. செருக்குடை மன்ன ரிடைப்புக் கவரு
ளொருத்தற் குதவாத சொல்லிற்—றனக்குந்
திருத்தலு மாகாது தீதா மதுவே
யெருத்திடை வைக்கோ றினல்.

எ - து, களிப்புடையமன்னரிருவரிடையே யொருவன்புக்கு அவரு ளொருத்தற்கும்பயன்படாதசொற்களைச் சொல்லுதலான் அவர்களிருவரும் வேறுபட்டுணரத் தன்னாற் றிருத்தலுமாகாதே தீதாய்விளையும்; இரண்டேற்றி னடுவேயிட்டவைக்கோலை யோருழப்பெருது புக்குத் தின்னலுற்றால் அவ்விரண் டாலுந்துன்பமுற்றுத் தின்னவும்பெரு ததுபோலும் என்றவாறு.

(குறிப்பு) இது, ஈராசரிடைப்பட்டார் அவ்விருதலைக்கும் நன்மை பயவாச்சொற்களைச்சொல்லலாகாதென்கிறது. வேறுபட்டுணர்தலாவது தம்மை நியமிக்குங்கருத்துடையனெனவெண்ணல். திருத்தல்—அவ ரிடை நன்னெஞ்சுடையனாய்ச் சொல்லினனெனக்காட்டல். தீதாய் விளைதல்—தெண்டனைக்குமுள்ளாகி அவரிடைத் தனக்கிருந்த ஜீவனோ பாயத்தையு மிழத்தல். இரண்டேறு—இணையெருது. உழப்பெருது— இங்குமங்குந்திரியும் பட்டியெருது. இதன் பழமொழி 'கடாவிடுக்கிற் புன்மேய்வதுபோலும்' எனக் கிராம்யவழக்காய் வழங்கப்படும்.

188. இம்மைப் பழியு மறுமைக்குப் பாவமுந்
தம்மைப் பரியார் தமரா யடைந்தாரிற்
செம்மைப் பகைகொண்டு சோரா தார் தீயரோ
மைம்மைப்பி னன்று குருடு.

எ - து, இம்மைக்கு விளையும் பழியையும் மறுமைக்கு விளையும் பாவத் தையும் தம்மாட்டுநின்றுநீக்காராய்த் தமர்போல உட்பகையாய்வாழ்வார்போல நேரே பகைகொண்டு சேர்ந்தொழுகாதார் தீயரல்லர்; தோன்றிற்றுந் தோன்றாது மாங் கண்ணின்றன்மையிற் குருட்டுக்கண்ணின்றன்மையே நன்றாதலானென்ற வாறு.

(குறிப்பு) இது, உட்பகையுடையார் நட்பின்கொடுமை கூறுகின் றது. 'நேரேபகைகொண்டு'—வெளிப்படப் பகைமையுடையவராயிருந்து கொண்டு. 'சேர்ந்தொழுகாதார்'-விரோதிப்பவர். தமர்போல உட்பகையாய்

வாழ்வார்போலத் தீயரல்லர் எனக் கூட்டுக. உட்பகையாய்வாழ்வாரே மிகவும் தீயராவர்; அவரைநோக்கப் புறப்பகையாய் விரோதிப்பவர் ஒருவாறு நல்லர் என்பது கருத்தாகக்கொள்க. 'மைம்மைப்பு' என்றது மை என்னும் பொருட்பெயர் கருநிறத்துக்காய்ப் பின் அது விளக்கப்பொருள் குறிக்கும் 'பளபளப்பு' என்பதுபோல இரட்டைக்கிளவியாய்நின்று இருளையுணர்த்துங் குறிப்புமொழியாகிப் பின் இருட்டோற்றம்போலுந் தோற்றமடையுங் கண்களையுணர்த்திநின்றது. இதனைச் சிந்தாமணியுரையுள் 'மைத்தல் ஒளிகெடுதல்; 'மைம்மைப்பினன்று குருடு' என்றாற்போல' என்பர் நச்சினார்க்கினியர். * இருட்டுக்கண்ணுக்குக் குருட்டுக்கண் நல்லது என்பது இதன் பழமொழி. இருட்டுக்கண் மேடுபள்ளந்தோற்றாது வெள்ளிடைதோன்றக்காட்டி ஆற்றிலிழிவித்து வீழ்த்துவதுபோலக் குருட்டுக்கண் வீழ்த்தாதாதலால் இருட்டுக்கண்ணை நோக்கக் குருட்டுக்கண் நல்லதாயிற்று. இவ்வாறே உட்பகையாயினார் உதவிசெய்வார்போல வெளிப்படஒட்டி இடர்ப்பாடுகோட்டாது கெடுகாரியங்களிலிழிவித்துக் கெடுப்பதுபோலநேரேபகைத்து விரோதிப்பார் கெடுக்கமாட்டாராகையால் அவரைநோக்க இவர் நல்லவராவரெனப் பொருளொடுபொருத்தியுரைத்துக்கொள்க. இதனால், நேரே பகைத்திருப்பாரினும் உட்பகையாய் உறவுகொள்வாரே தீயவர் என்பது கருத்தாயிற்று.

189. எய்தா நகைச்சொல் லெடுத்துரைக்கப் பட்டவர்
வைதாராக் கொண்டு விடுவர்மன மஃதாற்
புனற்பொய்கை யூர விளக்கெலி கொண்டு
தனக்குநோய் செய்து விடல்.

எ - து, தமக்குள்ளதன்றியிருந்த இகழ்ச்சிச்சொல்லைப் பிறராலெடுத்துரைக்கப்பட்டவர், அவ்வெடுத்துரைத்தார் தம்மை வைதாராக மனத்திற் கொண்டுவெகுள்வார்; அஃது அறிவின்மையானே, புனற்பொய்கையூரனே! விளக்கினை யெலிகொண்டேறி அவ்வெலி தனக்கு நோய்செய்ததனேடொக்குமென்றவாறு.

* பூமகளிலம்பகம் 7-ம் செய்யுளுரை.

(குறிப்பு) இது, ஒருவரையும் பரிகசிக்கலாகாதென்கிறது. அஃதென்றது எய்தாநகைச்சொல்லெடுத்துரைத்தலை; இதற்கு "விளக்கெலிகொண்டு, தனக்கு நோய் செய்துவிடல்" என்ற பழமொழித் தொடர் உபசாரவழக்காற் பெயர்ப்பயனிலையாயிற்று. ஒளியின்பங்கருதி எரியும் விளக்கின்றிரியை எலி கொண்டுசென்று அதனாற் சுடப்பட்டு அது துன்படையுமாறுபோல இளியின்பங்கருதி ஒருவர்க்கில்லாத இகழ்ச்சியை யெடுத்துரைப்பவனும் அவரா லடப்பட்டுத் துன்புறுவனெனப் பொருளொடுபொருத்தியுரைத்துக்கொள்க.

190. தூய்மை மனத்தவர் தோழர் மனையகத்துந்
தாமே தமியாப் புகல்வேண்டா—தீமையா
னூர்மிகி னில்லை கரியோ வொலிகட
னீர்மிகி னில்லை சிறை.

எ - து, தூய்மையையுடையமனத்தார் தம் தோழர்மனையின்கண்ணும் தமியராகத் தாமே புகல்வேண்டா; ஒருவன் தீமைசெய்தானென்று ஊரெல்லாம் உடன்பட்டு மிகுமாயிற் பிறிதொருசான்றில்லை; நீர்மிகிற் சிறையுமில்லையாதலானென்றவாறு.

(குறிப்பு) இது, பிறர்மனையினுள்ளே தமியராய்ச் செல்லற்கவென்கிறது. தூய்மையையுடைய மனத்தாரும் என உயர்வுசிறப்பும்மையை விரித்துரைத்துக்கொள்க. 'தோழர்மனையின்கண்ணும்' என்ற சிறப்பும்மையால் ஏனைமனையிற் புகுதலொன்றதென்பது சொல்லவேண்டாதாயிற்று. 'தாமே' என்றது அவரனுமதியுள்ளவழி விலக்கியவாறு. பின்னடி யிரண்டும் செய்யுளுடையானமைத்ததொரு பழமொழி. அதனுள் மூற்றொடர் எடுத்துக்கொண்டபொருளுக்கு ஏதுவாயிற்று. இப்பழமொழி, "நீர்மிகிற்சிறையுமில்லை" எனப் புறநானூற்றுள்ளும்* "சிறையென்பதில்லைச் செவ்வே செழும்புனல் பெருகுமாயின்" எனச் சூளாமணியுள்ளும்,† "சிறையுமுண்டோ செழும்புனன்மிக்குழீ" என ‡மணிமேகலை

* செய்யுள் 51

† கல்யாணச்சருக்கம். செய்யுள் 155.

‡ காதை 5. வரி 19.

யுள்ளும் வழங்கப்பட்டுள்ளது. 'பிறிதொருசான்றில்லை' என்றது தாம் நிமைநீங்கிய தூய்மையுடையவரெனக் காட்டுதற்கு என்க. 'நீர் மிகினில்லைசிறை' என்றது எடுத்துக்காட்டுவமம்.

191. பண்டுறுத்துச் செய்த பழவினை வந்தெம்மை
யின்றொறுக்கின்ற தெனநினையார்—துன்புறுக்கு
மேவலரை நோவதென் மின்னேர் மருங்குலா
யேவலா ளூருஞ் சுடும்.

எ - து, முன்பு பிறந்துசெய்த பழவினைவந்து எம்மை இப்பொழுது ஒறுக்கின்றதென்றுணராதே தம்மைத் துன்பஞ்செய்யும்பகைவரை நோவதென்னை? மின்னேரிடையினாய்! ஒருவனாலேவப்பட்ட ஏவலாளன் இது மிகக் கொடியசெயலென்றுபாராதே யூரையுஞ்சுடுமாதலானென்றவாறு.

(குறிப்பு) இது, பழவினையாற்றுன்புறுவார் துன்புறுப்பாரை நோகலாகாதென்கிறது. ஆற்றமாட்டாதார்க் கொரு கேடுண்டானால் அக் கேடிழைத்தவரை அவர் நோவாது இது தம் பழவினையால்வந்தகேடென் றெண்ணி ஆறுதலடையவேண்டுமென்பது கருத்து. 'ஏவலா ளூருஞ் சுடும்' என்பது இதன் பழமொழி. ஒருவனால் ஒருதீங்கிழைக்குமா றேவப்பட்டோன் அவ்வேவற்கிலக்கானோர்மட்டன்றி அவருக்குதவியாம் ஊரையும் சுட்டுத் தீங்கிழைப்பன், என்ப திதன்பொருள்.

192. கற்றாற்று வாரைக் கறுப்பித்துக் கல்லாதார்
சொற்றாற்றுக் கொண்டு சுனைத்தெழுத—லெற்றெனிற்
றூறு நடவான் முடவன் பிணிப்பூணி
யானைபோ டாட லுறவு.

எ - து, கற்றுவல்லாராய்க் கல்வியை நடத்தவல்லாரை வெகுள்வித்துக் கல்லாதார்சொற்களைக் கொழித்துக்கொண்டு மனவெழுச்சியான்மிக்கெழுதல் எத்தன்மைத்தெனின், தானும் நடக்க ஆற்றலில் முடவனாய்க் கையும் பிணிகொண்டு தவழ்வானொருவன் ஆனையொடாடிவிளையாடலுறுதலோடொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இது, கல்லாதார்சொல்வதை நம்பிக் கற்றார்சொல்வதை மறுத்து வாதாடப்புகலாகாதென்கிறது. கல்வியைநடத்தலாவது

கற்போரைக் கற்பிக்கவல்லராதல். வெகுள்வித்தல்—இங்கு அவமதித்தல். 'கொழித்துக்கொண்டு' என்றது தெள்ளித்தெளிந்து என்றபடி. மன வெழுச்சி-இங்குக் கொண்டகொள்கையைவிடாத மூர்க்கத்தன்மை. மிக் கெழுதல்—அதிக்கிரமித்துவாதித்தல். ஆடி—போராடி. இதன் பின்னடி யிரண்டும் பழமொழிவாசகம். அதன் வடிவம் வந்துழிக் காண்க.

193. தீப்பால் வினையினைத் தீரவு மஞ்சாராய்க்
காப்பாரே போன்றுரைத்த பொய்குறளை—யேய்ப்பார்முற்
சொல்லோ டொருப்படார் சோர்வின்றி மாறுபவே
வில்லொடு காக்கையே போன்று.

எ - து, தீப்பான்மையையுடைய செய்கையை மிகவுமஞ்சாராய்த் தம்மைக் காப்பாரேபோலச் சிலவுரைத்துப் பொய்யையுங் குறளையையும் பொருத்திச் சொல்லுவார் முன்பு சொல்லுஞ் சில இனிய சொற்களால் அவரைத் தம்மொடு நட்புக்கொள்ளாதே மறவியின்றியே மாறி நீங்குவர்; வில்லொடு காக்கைபோல மேவாதென்றவாறு.

(குறிப்பு) இது, காப்பார்போற் காட்டி ஏய்ப்பார்பேச்சுக் கிணங்க லாகாதென்கிறது. பொருத்திச்சொல்லுவார்—பொருத்திச்சொல்வார்க ளுடைய. முன்புசொல்லும் சில இனியசொற்களாவன—காப்பார் போன்றுரைக்குஞ் சொற்கள். 'சொற்களால் அவரைத் தம்மொடு நட்புக் கொள்ளாதே' என்றது காப்பார்போன்று ஏய்க்கும் இனியசொற்களால் மயங்கி அவ்வேய்ப்பாரொடு நட்புக்கொள்ளுதலைச் செய்யாமல் என்ற வாறு. 'மாறிநீங்குவர்' என்றது வெறுத்துநீங்குவர் அறிவுடையோ ரென்றவாறு. "வில்லொடு காக்கையேபோன்று" என்றது நெல்லைக் கண்டு நெருங்கியகாக்கை வில்லைக்கண்டு விலகியதுபோலும் என்னும் பழமொழிப்பொருளைத் திட்டாந்தங்காட்டியவாறு. காப்பாரேபோன் றேய்ப்பாருரைத்த இன்சொற்கு நெல்லும், அவர்செய்யக்கருதுந் தீப் பால்வினைக்கு வில்லும் உவமங்களாம்.

194. நெடுங்காலம் வந்தார் நெறியின்மை கண்டு
நடுங்கிப் பெரிது நலியார் பெரியா
ரடும்பா ரணிகானற் சேர்ப்ப கெடுமே
கொடும்பா டுடையான் குடி.

எ - து, தீநெறிக்கண்ணே நெடுங்காலமொழுகிப்போந்தோர்நெறியின்மை யைக்கண்டு பெரியோர் மிகவும் நடுங்கி யொருகுறையை மேலிடார்; மேலிடுவ ராகில் அடும்பைப்பூவாலழகுபெறுந் துறையையுடைய சேர்ப்பனே! கொடிய தன்மையையுடையான்குடி கெடுமென்றவாறு.

(குறிப்பு) இது, பெரியாரைப் பிழைக்கலாகாதென்கிறது. 'தீ நெறிக்கண்ணே நெடுங்காலமொழுகிப்போந்தோர்நெறியின்மை' என்றது தீயாதுநெறியின்மை பெரியாராகிய தம்மிடத்து ஒருகாரணம்பற்றிச் செய்வதன்று, அவர் பிறரிடத்து நெடுங்காலஞ்செய்துபோந்த வாசனை வயமாகச் செய்வதாமாதலால் அவரை ஒறுத்து அதனையொழித்தல் ஒருபோதுமாகாதென நடுங்கிப்பெரிதும்நலியாமைக்குக் காரணங் காட்டி விசேடித்தவாறு. பெரியோர் என்றது கல்வி அறிவு பொருள் ஆற்றல் முதலியவற்றான்மிக்காரை என்க. 'மிகவுநடுங்கி' என்றது நெடுங்காலம் பயின்றார்செய்யும்நெறியின்மையினளவு மிகவாயிருக்குமாத லால் அதற்கேற்றவாறு மனச்சஞ்சலமுடையரா பென்றவாறு. 'ஒரு குறையைமேலிடார்' என்றது நெறியின்மைசெய்தாரால் தமக்கு ஒரு குறைவந்ததாகக்கொள்ளார் என்றவாறு. 'மேலிடுவராகில்' என்றது குறைவந்ததாகநினைத்து விபாகூலங்கொள்வராகில் என்னுங் காரணம் வருவித்துரைத்தவாறு. 'கொடியதன்மையையுடையான்குடி கெடும்' என்றது அவன் கெடுதலேயன்றி அவன் சம்பந்தமுடைய குடிவழியி லுள்ளாரும் கெடுவர் எனப் பெரியார்மாட்டுச் செய்யும் நெறியின்மையின் கொடுமைகூறியவாறு. கொடும்பாடுடையான் குடிகெடும் என்பது இதன் பழமொழி. இது, பெரியாரைப் பிழைபற்க என்னும் எடுத்துக்கொண்ட பொருளை முடித்தற்கு ஏதுவாய்நின்றது.

195. நீர்த்தன் றொருவர் நெறியன்றிக் கொண்டக்காற்
பேர்த்துத் தெருட்டல் பெரியோர்க்கு மாகாதே
கூர்த்தநுண் கேள்வி யறிவுடையார்க் காயினு
மோர்த்த திசைக்கும் பறை.

எ - து, நீர்மையுடைத்தாகவன்றியே நெறியன்றி யொருவர் தம்மை மனத்தின்கட்கொண்டக்கால் அக்கோட்பாட்டினின்று மீட்டுத்தெருட்டுதல் தவத்தாற் பெரியார்க்கும் முடியாது; மிக்க கேள்வியானே யறிவுடையார்க்கேயாயினுந் தாங்கருதிய வனுகரணத்தையொலிக்கும் பறையாதலாற் றம்மை யொருவர் பிறழக்கொள்ளாதபடி யொருகுற்றமும்படாமலொழுகவென்றவாறு.

(குறிப்பு) இது, பிறர் தன்னை ஐயுறுவாறு அரியவைபோற்றி யொழுகவேண்டுமென்கிறது. 'நீர்மையுடைத்தாகவன்றி' என்றது நீர்மையுடைத்தாகக் கொள்ளுதலன்றி என்றவாறு. நெறியன்றிக் கொண்டக்கால் எனக் கூட்டுக. நெறியன்றிக்கொள்ளுதலாவது நல்லொழுக்கமுடையோரை யுள்ளபடிகொள்ளாது பிறழக்கொள்ளுதல். அக்கோட்பாடு—அங்ஙனங்கொண்ட கோட்பாடு. பறை—சாப்பறையென்னும் வாச்சிய விசேடம். தாம்கருதிய அநுகரணம்—அப்பறையொலிகேட்டமாத்திரத்தே தாம் கருதியதொரு வாக்கியாநுகரணம்; அதாவது 'தந்தனகொண்டாம் கொண்டனதந்தாம்' என்றற்றொடக்கத்தனவாகத் தோன்றும் அநுகரணம். இன்னோரன்ன அநுகரணம் பொருளொடுபொருந்தாவாயினும் மாற்றுதற்கியலாதவாறுபோலக் கடுத்தார்கோட்பாடு பொருளொடுபொருந்தாதிருப்பினும் மாற்றுதற்கியலாதாதலாற் பிறர் தன்னைத் தவறுடையனாகக் கொள்ளாதவாறு அரியவைபோற்றி யொழுகவேண்டுமென்றபடி. இக்கருத்து, "போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்—றேற்றுதல் யார்க்கு மரிது" என்னுங் குறளினுங் காண்க. 'ஓர்த்த திசைக்கும்பறை' என்பது இதன் பழமொழி. இது, கலித்தொகை மருதக்கலி 27-ஆம் செய்யுளினும் பயின்றுள்ளது.

196. புரையின்றி நட்டார்க்கு நட்டா ருரைத்த
வுரையும் பொருண்முடிவு மொன்றே—னுரைபிறிது
கொண்டெடுத்துக் கூறல் கொடுங்குழித் தண்சேர்ப்ப
வொன்றேற்றி வெண்படைக்கோ ளொன்று.

எ - து, குற்றமின்றி நட்டார்க்கு நட்டார்சொல்லுஞ்சொல்லும் அச்சொல்லின் பொருண்முடிவுந் தம்மு ளொன்றேயேயிருக்கும்; தாமுரைக்குமுரையைத் தாஞ்செய்யுஞ் செய்கையொடு வேறுபட வஞ்சனையாற்கொண்டெடுத்துக் கூறுதல், கொடுங்குழித்தண்சேர்ப்பனே! ஒருவனது பாவினையேற்றி மற்றொருவன் பாவாகக் கட்டுதலோடொக்குமென்றவாறு.

(குறிப்பு) இது, தம்மாட் டன்புடையார்கூறுங்கூற்றுக்கு விபரீதப்பொருள்சொல்வார்பேச்சை விரும்பலாகாதென்கிறது. சொல்லும் பொருளுமொன்றாயிருத்தலாவது— இதமாயிருத்தல். 'தாம்செய்யுஞ் செய்கையொடுவேறுபட' என்றது அகிதமாயிருக்கும்படி யென்றவாறு. வஞ்சனையாற் கொண்டெடுத்துக் கூறுதலாவது, சொல்வோன்கருத்து வேறென்றுதெரிந்திருந்தும், அதனைக்காட்டாது, பிறிதொருகருத்துக் கொண்டு வேண்டாதன கூட்டிக்கூறுதல். இங்கு 'எடுத்தல்' என்றது மதிலின் மேற்படையெடுத்தாயிற்று என்பதுபோலக் களைதலும் கட்டுதலுமாகிய இருபொருளும்படநின்றது. 'ஒருவனதுபாவினையேற்றி' என்றது ஒருவன்மேல் ஒருவன்பாடியதொருபாட்டிற் பாடப்பட்டவனைக் காட்டவல்லதொருபகுதியைக் களைந்தெறிந் தென்றவாறு. 'மற்றொருவன்பாவாகக்கட்டுதலோடொக்கும்' என்றது அக்களைந்தவிடத்து மற்றொருவனுக்குரிய பெயரும் அடையும்வைத்து அவன்மேற்பாடப்பட்டதாகக் கட்டுதலோடொக்குமென்றவாறு. இப்படிப் பாட்டுக்கட்டுதலைச் 'குழியப்படைதட்டிக்கட்டல்' என்னும் குறிப்புமொழியால் வழங்குவர்; அக்குறிப்புமொழியே இங்கெடுத்துக்கொண்ட பழமொழியாம் என்க. உரைபிறிதுகொண்டெடுத்துக் கூறலுக்கும், குழியப்படைதட்டிக் கட்டலுக்கும் உள்ள பொதுத்தன்மை சொல்வோன்கருத்தொடு மாறுபடுதலாம்; ஆகவே அது கேட்கலாகாதென்பது கருத்து. குழியப்படைதட்டிக்

கட்டலாவது, அயலான்மனைமதிற்கு அடையாளமாயிருக்கும் சூழியப் படையை யிடித்தகற்றி எஞ்சிய வெண்படையைக்கொண்டு மேலும் சிறிது வேறுபடக்கட்டிப் பிறனதாக்கிவிடுதல். இது, இவ்வாறே அயலானுக்குரியதாகக் காட்டும்பாட்டின் நாமமுத்திரையைமாற்றிப் பிறனுக்குரிய நாமமுத்திரைவைத்துப் பிறனதாகக் கட்டுஞ்செயலில் வழங்குங் குறிப்புமொழியாம். "ஒன்றெற்றி வெண்படைக்கோ ளொன்று" என்றதில், படையெனப் பின்வருதலால் ஒன்றென்றது மதிற்படையி னொருபகுதி யென்பது பெறப்படும். மற்றொருபகுதி வெண்படை யென்றதனல் இது சூழியப்படையாயிற்று. வெண்படை—நிர்விசேஷமானபடை. சூழியம்—கௌதுவம் என்னும் மதிற்றலையுறுப்பு. கோள்—கொண்டு முடித்துக் கொள்ளுதல்.

197. பட்ட வகையாற் பலரும் வருந்தாமற்
கட்டுடைத் தாகக் கருதிய நல்லற
முட்டுடைத் தாகி யிடைவீழ்ந் தொழிதலி
னட்டாறு ளுதலே நன்று.

எ - து, உண்மையாகியவகையாற் பலரும்வருந்தாவகை வரம்புடைத்தாகத் தம்மாற் கருதிச்செய்தொழுகுகின்ற நல்லறத்தை யிடையூறுடைத்தாக நடுவே தவிர்ந்து தானீங்குமதனிற் செய்யைநட்டுவைத்துப் பயன்கொள்ளாததுவேநன் றென்றவாறு.

(குறிப்பு) இது, அறத்துறை நடாத்துமவர் இடர்ப்பாடுநோக்கி இடைவிலகலாகாதென்கிறது. வரம்பு—அவ்வறத்துறைக்குரிய விதானம். "நட்டாறுளுதலேநன்று" என்றது இதன் பழமொழி. ஸ்வப்பிரயோஜனமாக மாப்பயிர்களை நட்டுவைத்தும் பயன்பெறாதழியவிடும் வேளாளனிலும், பாப்ரயோஜனமாக அறப்பயிரை நட்டுவைத்துப் பயன் பெறாதழியவிடும் தாளாளன் மிகப்பழிக்கத்தக்கான் என்பது கருத்து,

198. இறப்ப வெமக்கீ திளிவாவென் றெண்ணார்
பிறப்பிற் சிறியாரைச் சென்று—பிறப்பினாற்
சாலவு மிக்கவர் சார்ந்தடைந்து வாழ்பவே
ஞால வடைக்கலமே போன்று.

எ - து, மிகவும் இச்செயல் எமக்கிளிவாவென்றுபாராது குடிப்பிறப்பாற் சிறியாரைக் குடிப்பிறப்பினுன் மிகவும்பெரியார் சென்று சார்ந்தடைந்துவாழ்தல் குற்றமில்லை; ஒருவர்மாட்டுவைத்த தாலவடைக்கலமேபோன் றொளி மழுங்கி யாயினு மென்றவாறு.

(குறிப்பு) இது, உயர்குலமுடையார் வறுமையுற்றுழி இழிகுல முடையாரைச்சார்ந் துயிர்வாழின் அது ஆபத்தருமமாகையால் அது பற்றி அவரைப் பழிக்கலாகாதென்கிறது. சார்ந்தடைந்து ஒளிமழுங்கி யாயினும் வாழ்வார்; அங்ஙனம் வாழ்தல் குற்றமில்லை என முடிக்க. தாலவடைக்கலம்—அடகு வைத்த வெண்கலத்தாலமாகிய உண்கலம். வறுமை மிக்குழி உண்கலமாகிய வெண்கலவட்டிலை அடகு வைத்துழி அதனைத் தீண்டுவாரின்றி அஃது ஒளிமழுங்கியிருப்பினும், வறுமை தீர்ந்தவாறே அடகின்மீண்டு கழுவப்பட்டு விளக்கமுறுவதுபோல அவ ரும் வறுமைதீர்ந்துழி அவர்சார்பினீங்கிக் கழுவாயாற் கழுவப்பட்டு ஒளியுடையாரவாதலால், தாலஅடைக்கலம் அவர்க்கு உவமமாயிற்று. 'தாலவடைக்கலம்' என்றது விளக்கமற்றதொன்றையுணர்த்துங் குறிப்பு மொழியாய்நின்று பழமொழியாயிற்றுப் போலும்.

199. தக்கமில் செய்கைப் பொருள்பெற்று லப்பொரு
டொக்க வகையு முதலு மதுவானுன்
மிக்க வகையா னறஞ்செய் கெனவெகுட
லக்காரம் பால்செருக்கு மாறு.

எ - து, நிலையில்லாத செய்கையையுடையபொருள்க டமக்குவந்துகிடைத் தால் அப்பொருள் தமக்குத்திரண்டதிறத்தினருமையும் அப்பொருள் தமக்குத் தொகுதற்குக் காரணமும் அவ்வறமாதல், மிக்கதன்மையால் அறத்தைச்செய் யென வெருடல் அக்காரத்தையும் பாலையுஞ் செருக்கிக்காலுமதனேடொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இது, அறவுரைகொள்ளாமை அருவருக்கத்தக்கதென் கிறது. 'செய்யென' என்றது செய்வாயாகவென்று தருமோபதேசஞ்

செய்வார் சொல்ல அது காரணமாக என்றவாறு. வெகுடல்-அவ்வுரையை யேற்றுக்கொள்ளாது வெகுண்டுதள்ளுதல். அக்காரம்—சருக்கரை. செருக்கி—உட்கொள்ளாதகுமட்டி. காலல்—கக்குதல். 'அக்காரம் பால் செருக்குமாறு' என்றது இதன் பழமொழி. இதனை, "வெண்ணெய்க் கட்டியுஞ் சீனியுமூட்டலாம் விக்கிக்கொள்வதற்கென்செய்யலாம்" எனப் பிறவாற்றானும் வழங்குப.

200. உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்த பெருமை
யடக்கமி லுள்ளத்த னாகி—நடக்கையி
னொள்ளிய னல்லான்மேல் வைத்தல் குரங்கின்கைக்
கொள்ளி கொடுத்து விடல்.

எ - து, உடைப்பெருஞ் செல்வத்தான் வரும் உயர்ந்த முதன்மையைத் தானல்லாரால் அடக்கவு மடங்காதவுள்ளத்தனாகி யொழுக்கத்தா னல்லனல்லா தான்பக்கத்தேவைத்தல் குரங்கின்கையிலே ஒருகொள்ளியைக் கொடுத்துவிட்டதனோடொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இது, செல்வமுடையானெய்தற்குரியதொரு தலைமையை அச்செல்வமுடைமையொன்றேபற்றி, அடக்கமும் ஒழுக்கமும் இல்லாதானுக்கு அளிக்கலாகாதென்கிறது. குரங்கின்கைக்கொள்ளிகொடுத்தல் அனர்த்தகரமாவதுபோல அடக்கமும் ஒழுக்கமும் இல்லாதவனுக்கு அளித்த தலைமையும் அனர்த்தகரமாமெனப் பொருளொடுபொருத்தி யுரைத்துக்கொள்க. 'குரங்கின்கையிலே கொள்ளியைக் கொடுத்தாற் போலும்' என்பது இதன் பழமொழி.

இவ்விரண்டாவது நூறுபாட்டுக்களின் முதற்குறிப்பு வருமாறு:—

பரிய வெனக்கு நிரம்பி நல்லவும்
சுடப்பட்டு வாட்டிறல் பெற்றானு முள்ளூர்
மெய்யா கூற்ற நன்றே யாண்மை

டிடையிடு தெற்ற அகல மமர்விலங்கித்
தாயானுங் கட்டுடை யொற்கம் பன்னுளுங்
காடுறை விலங்கே கருவினுட் டங்குற்ற
முரைசான்ற ஆற்ற ஆகுங் காட்டித்
தொன்மையி னெடியது செம்மாந்து செய்த
பண்டினர் பலநாளுந் தெரியா அருவிலே
தோற்றங் கற்றுனும் பெரியாரை மரம்போல்
அற்றுக நாணுர் பாந்தவர் தமரல்
ஒல்லாத கடுப்பப் பொருளல்லார் முன்னவி
நெறியா லாற்றும் வழங்கலும் ஆவிற்குப்
பூந்தண் இஞ்சி ஆற்றத் தன்னவி
வலியாரை மறுமை அறஞ்செய் வருவாய்
இனியாரும் கூஉய்த் தோற்றம் செறவின்
மறுமனத் தோற்றத்தா லுடுக்கை ஓர்த்த
காப்புடை யுரிஞ்சி மாற உறுமகன்
அல்லது யாந்தீய வேளாண்மை யுரைத்தவர்
களமர் ஆண்டகை யாவரே வெள்ளம்
வெற்றி கொழித்து வளமையும் பொல்லாத
அகத்தா லழிவு கற்றது செருப்புடை
இம்மை எய்தா தூய்மை பண்டுறுத்துக்
கற்றுற்று திப்பால் நெடுங்காலம் நீர்த்தன்று
புரையின்றிப் பட்டவகையால் இறப்பத்
தக்கமில் உடைப்பெரு மெய்ம்மை யென்றிவை
பழமொழி யிரண்டா நூற்றடி வாவே.